# श्रीमद्भगवद्गीता ।

# ஸ்ரீமத் பகவத் கீதை.

# பகவத் கீதை

ஸ்ரீ. சி. சுப்பிரமணிய பாரதியார்
மொழிபெயர்ப்புடன்.

பாரதி பிரசுராலயம்,
திருவல்லிக்கேணி,
சென்னை.

தாது ௵

3-வது பதிப்பு.] [விலை அணா 5.

# முன்னுரை.

---

ஸ்ரீமத் பகவத் கீதையின் இத் தமிழ் மொழிபெயர்ப்பு எத்தகையது என வுரைக்க எனக்குப் போதுமான தமிழ் ஞானமில்லை, ஆயினும், ஒவ்வொரு ஹிந்துவும் ஸ்ரீமத் கீதையைப் பாராயணம் பண்ணுகை ஒரு னாளாயினும் வீண்போக்குதல் கூடாது. இத் தகையோர்க்கு இம் மொழிபெயர்ப்பு டன் கூடிய இக்கீதை பெரிதும் பயன்படும்.

ஸபர்மதி ஆச்ரமம்,<br>சக்ல சதுர்த்தசி,<br>பௌஷ், 84.

மோ. க. காந்தி.

# प्रस्तावना

---

तमिल भाषा का मेरा इतना ज्ञान नहीं है कि मैं गीता के इस अनुवाद के विषय में कुछ कह सकूं। परंतु मैं यह अवश्य कह सकता हूँ कि किसी भी हिन्दू को श्रीमद्भगवद्गीता के अध्ययन के विना एक दिन भी नहीं विताना चाहिये। ऐसे गीता के पुजारी को यह अनुवाद फलरूप होगा।

साबरमती,
पौ. शु. १४, ८४. } मोहनदास करमचन्द गान्धी.

# प्रस्तावना

तमिलभाषायां नास्ति मम तादृशी योग्यता यदहं तत्साहाय्येन श्रीमद्भगवद्गीताया एत-दनुवादविषये किमपि वक्तुं शक्नुयाम्। तथापि प्रतिहिन्दुना गीताध्ययनं विना दिनमप्येकं ऽव्यर्थतां न नेतव्यमिति नितरामभिल-षामि। इत्थमयमनुवादो गीतापूजकस्य फल-दाता भवितेति शम्॥

साबरमती आश्रम,<br>पौ. शु. १४, ८४, } मोहनदास करमचन्द गान्धी.

# பொருளடக்கம்.

ॐ

# श्रीमद्भगवद्गीता ।

# பகவத் கீதை.

## प्रथमोऽध्यायः

## முதலத்யாயம்.

குரு க்ஷேத்திரப் போர் நடக்கையிலே
கண்ணில்லாத திருதராஷ்ட்ர ராஜன் தான்
அங்கு செல்லக் கூடாமையால் ஹஸ்தினபுரத்
தில் தனதரமனையில் இருந்து கொண்டே
போர்க் களத்தில் நடக்கும் செய்திகளைத் தனக்
குச் சொல்லும் படி ஸஞ்ஜயன் என்ற மந்தி
ரியை நியமிக்கிறான். வேத வியாஸ ரருளால்
ஞானதிருஷ்டி பெற்றவனாய் ஸஞ்ஜயன் போர்க்
களத்துச் செய்திகளை திருதராஷ்ட்ரனுக்குச்
சொல்லுகிறான். கண்ணனுக்கும் பார்த்தனுக்
கும் போர்த் தொடக்கத்தில் நிகழ்ந்த ஸம்பா
ஷணையை ஸஞ்ஜயன் கூறுவதாகச் சமைக்கப்
பட்ட பகவத்கீதைக்கு இந்த முதலத்தியாயம்
பாயிர மாகக் கருதத் தகும்.

## அர்ஜுனன் துயரம்.

धृतराष्ट्र उवाच—

**धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।**
**मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥ १ ॥**

திருதராஷ்ட்ரன் சொல்லுகிறான்—

ஸஞ்ஜயா, அற நில மாகிய குரு நிலத்தில் போர் செய்ய விரும்பித் திரண்ட நம்மவர்களும் பாண்டவரும் என்ன செய்தனர்? 1

सञ्जय उवाच—

**दृष्ट्वा तु पाण्डवानीकं**
**व्यूढं दुर्योधनस्तदा ।**
**आचार्यमुपसङ्गम्य राजा**
**वचनमब्रवीत् ॥ २ ॥**

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—

அப்போது துர்யோதன ராஜன் அணி வகுத்து நின்ற பாண்டவர் படையைப் பார்த்து விட்டு, ஆசார்ய (துரோண) னிடம் போய் (ப்பின் வரும்) வார்த்தை சொல்ல லாயினன்:— 2

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

"குருவே, துருபதன் மகனும் நின் சீடனு மாகிய நிபுணனால் வகுப்புற்ற இப் பெரிய பாண்டவப் படையைப் பார்! 3

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

இங்கு சூரரும் பெரிய வில்லாளிகளும், போரில் வீமனையும் பார்த்தனையும் நிகர்த்தவரு மாகிய பலர் இருக்கிறார்கள்:—யுயுதானன்; விராடன்; மஹாரதனாகிய துருபதன்; 4

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥

திருஷ்டகேது; சேகிதானன்; வீர்ய முடைய காசிராஜன்; புருஜித்; குந்தி போஜன்; மனிதரே றாகிய சைவியன்.

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

வலிமை மிக்க யுதாமந்யு; உத்தமௌஜா என்ற வீரன்; ஸௌபத்ரை மகன்; திரௌபதி மக்கள்; எல்லாருமே மஹாரதர். 6

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥७॥

இனி, எனது படைக்கு நாயகராய், நம் முன்னே சிறந்தோரையுந் தெரிந்து கொள். இருபிறப்பாளரில் மேம்பட்டவனே, குறிப்பின் பொருட்டாக அவர்களை உனக்குச் சொல்லுகிறேன். 7

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥ ८॥

நீ; பீஷ்மன்; கர்ணன்; பொருநர் கூட்டத்தை வெல்வோனாகிய கிருபன்; ஸோமதத்தன் மகன்; 8

**अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।**
**नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥**

இன்னும் வேறு பல சூரர்; என் பொருட்டு வாழ்க்கையைத் துறந்தோர்; பல விதமான ஆயுதங்களும் அம்புகளு முடையோர்! எல்லோருமே போரில் நிபுணர். 9

**अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।**
**पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥**

(எனினும்) பீஷ்மனால் காக்கப்படும் நமது படை (கண்ணுக்கு) நிறைந் திருக்க வில்லை. பீமனால் காக்கப் படும் இவர்களுடைய படையோ நிறைந் திருக்கிறது. 10

**अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।**
**भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥**

நீங்க ளனைவரும் வகுப்புக்களின்படி எல்லா இடங்களிலும் நின்றுகொண்டு பீஷ்மனையே காக்கக்கடவீர்." 11

**तस्य सञ्जनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।**
**सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥**

(அப்போது) துர்யோதனனுக்கு மகிழ்ச்சி
விளைவிக்குமாறு கீர்த்தி மிக்க கௌரவர் கிழவ
னாகிய பாட்டன் உயர்ந்த குரலில் சிங்க நாதம்
புரிந்து சங்கை ஊதினான். 12

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥१३॥**

அப்பால், சங்குகளும், பேரிகைகளும், தம்
பட்டங்களும், பறைகளும், கொம்புகளும் திடீ
ரென ஒலித்தன. அஃது பேரோசை
யாயிற்று. 13

**ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।**
**माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥१४॥**

பின்பு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய பெருந்
தேரில் நின்ற மாதவனும் பார்த்தனும் (தம்
முடைய) தேவச் சங்குகளை ஊதினர். 14

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥१५॥

கண்ணன் பாஞ்சஜன்யத்தை யூதினன்; தேவதத்தம் என்ற சங்கை தனஞ்ஜயன் ஒலித்தான்; அஞ்சுதற்குரிய செயல்களை யுடைய ஓநாய் வயிற்று வீமன் பௌண்ட்ரம் என்ற பெருஞ் சங்கை யூதினன். 15

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

குந்தி மகனாகிய யுதிஷ்டிர ராஜன் அநந்தவிஜயம் என்ற சங்கையும், நகுலனும் ஸஹதேவனும் (முறையே) ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்ற சங்குகளையும் ஊதினர். 16

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥१७॥

வில்லாளிகளில் மிகச் சிறந்த காசிராஜனும், மஹாரதனாகிய சிகண்டியும், த்ருஷ்டத்யும்நனும், விராடனும், வெல்லப்படாத ஸாத்யகியும், 17

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥

துருபதனும் துரோபதை மக்களும், பெருந் தோளுடையவனாகிய சுபத்திரை மகனும், தனித் தனியே தத்தம் சங்குகளை ஒலித்தனர், * பூமிக்குத் தலைவனே! 18

स घोषो धार्तराष्ट्राणां
हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव
तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

அந்தப் பெரு முழக்கம் வானையும் மண்ணையும் உடனொலிக்கச் செய்வதாய், த்ருதராஷ்ட்ரக் கூட்டத்தாரின் நெஞ்சுகளைப் பிளந்தது. 19

---

* இங்கு பூமிக்குத் தலைவனென்று திருதராஷ்ட்ரனை கதை சொல்லி வரும் ஸஞ்ஜயன் விளிக்கிறான்.

**अथ व्यवस्थितान्दृष्ट्वा**
**धार्तराष्ट्रान्कपिध्वजः ।**
**प्रवृत्ते शस्त्रसम्पाते**
**धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥**

அப்பால், (இரு திறத்தும்) அம்புகள் பறக்கத் தலைப்பட்டன. அப்போது குரங்குக் கொடி யுயர்த்த பார்த்தன் த்ருதராஷ்ட்ரக் கூட்டத்
தாரை நோக்கி வில்லை யேந்திக்கொண்டு, 20

**हृषीकेशं तदा वाक्य-**
**मिदमाह महीपते ।**
**सेनयोरुभयोर्मध्ये रथं**
**स्थापय मेऽच्युत ॥ २१ ॥**

கண்ணனைப் பார்த்துச் சொல்லுகிறான்: "அச்சுதா, படைக ளிரண்டுக்கும் நடுவே என் தேரைக் கொண்டு நிறுத்துக" என்று.
(கேளாய், த்ருதராஷ்ட்ர ராஜனே!) 21

अर्जुन उवाच—

यावदेतान्निरीक्षेऽहं योद्धु-
कामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्य-
मस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான்—

"சமரை விரும்பி நிற்கும் இவர்களை நான் பார்க்க வேண்டும். இந்தப் போர்த் தொடக்கத்தில் என்னோடு போர் செய்யக் கடவோர் யாவர்? 22

योत्स्यमानानवेक्षेऽहं
य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धे-
र्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

கெட்ட மதி கொண்ட துர்யோதனனுக்குப் பிரீதி செய்யும் வண்ணம், இங்கு போர் செய்யத் திரண்டு நிற்போரை நான் காண வேண்டும்" என்றான். 23

सञ्जय उवाच—

एवमुक्तो हृषीकेशो
गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये
स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

ஸஞ்ஜயன் சொல்லிக்கொண்டு வருகிறான்—

(கேளாய்) பரத நாட்டரசே, இங்ஙனம் பார்த்தனுரைத்தது கேட்ட கண்ணன் மிகவும் மேன்மை கொண்ட அத்தேரை இரண்டு படைகளுக்கு மிடையே கொண்டு நிறுத்தினான். 24

भीष्मद्रोणप्रमुखतः
सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्
समवेतान्कुरूनिति ॥ २५ ॥

பீஷ்மனுக்கும் துரோணனுக்கும் மற்றெல்லா வேந்தருக்கு மெதிரே தேரை நிறுத்திக் கொண்டு:—"பார்த்தா! இங்கு கூடி நிற்கும் கௌரவரைப் பார்!" என்றான். 25

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा

அங்கு பார்த்தன் தன்னுடைய தந்தையரும், பாட்டன்மாரும், குருக்களும், மாதுலரும், அண்ணன் தம்பிகளும், மக்களும், பேரரும், தோழர்களும் நிற்பது கண்டான். 26

श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान्

அங்ஙனமே மாமன்மாரும், நண்பர்களும், உறவினரெல்லாரும் இரண்டு படைகளிலும் நிற்கக் கண்டு, குந்தி மகனாகிய அப் பார்த்தன்— 27

कृपया परयाऽऽविष्टो विषीदन्निदमब्रवीत् ।
दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥२८॥

மிகவும் இரக்க முற்றவனாய்த் துயருடன் சொல்லுகிறான்: "கண்ணா, போர் செய்ய வேண்டி இங்கு திரண்டு நிற்கும் சுற்றத்தார்களைக் கண்டு, 28

**सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।**
**वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥**

என் அவயவங்கள் சோர்கின்றன. என் வாய் உலர்கிறது. என்னுடம்பு நடுங்குகிறது. மயிர் சிலிர்க்கிறது. 29

**गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।**
**न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥३०॥**

* காண்டீவம் கையிலிருந்து நழுவுகிறது. உடம்பில் எரிச்சலுண்டாகிறது. என்னால் நிற்க முடியவில்லை. என் மனம் சுழலுகிறது. 30

**निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।**
**न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥३१॥**

கேசவா, விபரீதமான சகுனங்களுள் பல காண்கிறேன். போரிலே சுற்றத்தார்களை மடிப்பதில் எனக்கு நன்மை தோன்றவில்லை. 31

---

* காண்டீவமென்பது அர்ஜுனனுடைய வில்லின் பெயர்.

न काङ्क्षे विजयं कृष्ण
न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविन्द
किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥

கண்ணா, நான் வெற்றியை விரும்புகிலேன்; ராஜ்யத்தையும், இன்பங்களையும் வேண்டுகிலேன். கோவிந்தா, நமக்கு ராஜ்யத்தால் ஆவதென்? இன்பங்களால் ஆவதென்? உயிர் வாழ்க்கையாலேனு மாவதென்னே? 32

येषामर्थे काङ्क्षितं नो
राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे
प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

யாவர் பொருட்டு நாம் ராஜ்யத்தையும் போகங்களையும் இன்பங்களையும் விரும்புகிறோமோ, அவர்கள் உயிரையும் செல்வங்களையுந் துறந்தோராய் இங்கு வந்து நிற்கிறார்கள். 33

**आचार्याः पितरः पुत्रा-**
**स्तथैव च पितामहाः ।**
**मातुलाः श्वशुराः पौत्राः**
**श्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥**

குருக்களும், தந்தையரும், மக்களும், பாட்டன்மாரும், மாதுலரும், மாமன்மாரும், பேரரும், மைத்துனரும், ஸம்பந்திகளும் (இங்குளர்.) 34

**एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।**
**अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥**

மதுஸூதனா, யான் கொல்லப்படினும் இவர்களைக் கொல்ல விரும்புகிலேன். மூவுலகின் ஆட்சி பெறுதற்கெனினும் (இது செய்யேன்.) பூமியின் பொருட்டுச் செய்வனோ? 35

**निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।**
**पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥**

ஜநார்த்தனா! திருதராஷ்ட்ரக் கூட்டத்தாரைக் கொன்று நாம் என்ன இன்பத்தை யடையப் போகிறோம்? இந்தப் பாதகரைக் கொல்வதனால் நம்மைப் பாவமே சாரும். 36

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥

ஆதலால், சுற்றத்தாராகிய திருதராஷ்ட்ர வர்க்கத்தாரைக் கொல்வது நமக்குத் தகாது. மாதவா, பந்துக்களைக் கொன்ற பின் நாம் இன்புற்றிருப்பதெப்படி? 37

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

அவாவின் மிகுதியால் அறிவழிந்த இவர்கள் குலத்தை யழிப்பதில் விளையும் தீங்கையும், நண்பருக்குச் சதி செய்வதிலுள்ள பாதகத்தையும் காண்கிலாராயினும், 38

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

ஜநார்தன, குல நாசத்தால் ஏற்படுங் குற்றத்தை யுணர்ந்த நாம் இப் பாவத்தினின்று விலகும் வழி யறியாதிருப்பதென்னே? 39

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

குல நாசத்தால் என்று முள்ள குலதர்மங்கள் அழிகின்றன. தர்மம் அழிவதனால் குல முழுதையும் அதர்மம் சூழ்கிற தன்றோ? 40

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥ ४१ ॥

கண்ணா, அதர்மம் சூழ்வதனால் குலஸ்திரீகள் கெட்டுப் போகிறார்கள். வ்ருஷ்ணி குலத் தோன்றலே, மாதர் கெடுவதனால் வர்ணக் குழப்ப முண்டாகிறது. 41

सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥४२॥

அக் குழப்பத்தால் குலத்தார்க்கும் அதனை அழித்தார்க்கும் நரக மேற்படுகிறது. இவர்களுடைய பிதிர்க்கள் பிண்டமும் நீரு மின்றி வீழ்ச்சி பெறுகிறார்கள். 42

**दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।**
**उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥**

*வர்ணக் குழப்ப முண்டாகும்படி குலக் கேடர் செய்யும் இக் குற்றங்களால் ஜாதி தர்மங்களும் தொன்று தொட்டுள்ள குலதர்மங்களும் எடு பட்டுப் போகின்றன.* 43

**उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।**
**नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥**

*ஜநார்தன, குலதர்மங்கள் எடுபட்டுப் போன மனிதருக்கு எக்காலும் நரகத்தில் வாஸமென்று கேள்விப் படுகிறோம்.* 44

**अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।**
**यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥**

*அந்தோ! அரச வின்பத்தை விழைந்து சுற்றத் தாரைக் கொல்ல முற்படும் நாம் பெரிய பாவஞ் செய்யத் தலைப்பட்டோம்!* 45

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

நான்கையி லாயுத மில்லாமல், எதிர்க்காமல் நிற்கு ம்போதென்னை இந்த திருதராஷ்டிரக் கூட்டத்தார் ஆயுதபாணிகளாய்ப் போரில் மடித்து விடினும் அது எனக்குப் பெரிய நன்மையேயாம். 46

सञ्जय उवाच—

एवमुक्त्वाऽर्जुनः सङ्ख्ये
रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं
शोकसंविग्नमानसः ॥४७॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—

செருக்களத்தில் இவ்வாறு சொல்லிவிட்டுப் பார்த்தன் அம்புகளையும் வில்லையும் எறிந்து போட்டுத் துயரில் மூழ்கிய மனத்தனாய்த் தேர்ப் பீடத்தின் மேலுட்கார்ந்து கொண் டான். 47

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु**
**ब्रह्मविद्यायां योगशास्त्रे**
**श्रीकृष्णार्जुनसंवादेऽर्जुनविषादयोगो नाम**
**प्रथमोऽध्यायः ।**

*இங்ஙனம் உபநிஷத்தும் பிரம வித்தையும் யோக*
*நூலும் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையு*
*மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில்*
*"அர்ஜுனன் துயரம்" என்ற*
*முதலத்யாயம்.*

# द्वितीयोऽध्यायः

## இரண்டாம் அத்யாயம்.

### ஸாங்க்யயோகம்.

सञ्जय उवाच—

तं तथा कृपयाऽऽविष्ट-
मश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्य-
मुवाच मधुसूदनः ॥ १ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—

அந்த வண்ணம் இரக்க மிஞ்சியவனும் நீர் நிரம்பிய சோக விழிகளுடன் வருந்திய அர்ஜுனனை நோக்கி மதுஸூதனன் சொல்லு 1
கின்றான்—

श्रीभगवानुवाच—

कुतस्त्वा कश्मलमिदं
विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्य-
मकीर्तिकरमर्जुन ॥ २ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

இந்த முட்டுதலில் இவ்வுள்ளச் சோர்வை நீ எங்கிருந்து பெற்றாய்? இஃது ஆரியருக்குத் தகாதது, வானுலகைத் தடுப்பது; அபகீர்த்தி தருவது—அர்ஜுனா! 2

क्लैब्यं मा स्म गमः पार्थ
नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं
त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥ ३ ॥

பார்த்தா, பேடித்தன்மை யடையாதே! இது நினக்குப் பொருந்தாது. இழிபட்ட மனத் தளர்ச்சியை நீக்கி எழுந்து நில்; பகைவரைச் சுடுவோனே! 3

अर्जुन उवाच—

कथं भीष्ममहं सङ्ख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான்—

மதுஸூதனா, பீஷ்மனையும் துரோணனையும் போரில் அம்புகளால் எப்படி எதிர்ப்பேன்? இவர்கள் தொழுதற் குரியர்; பகைவரை யழிப்போய்! 4

गुरूनहत्वा हि महानुभावान्
श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वाऽर्थकामांस्तु गुरूनिहैव
भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥ ५ ॥

பெரியோராகிய குருக்களைக் கொல்லாமல், உலகத்தில் பிச்சை யெடுத்துண்பதும் நன்று. பொருளை விரும்பும் குருக்களைக் கொன்று நாம் துய்க்கும் இன்பங்கள் உதிரத்திற் (ரத்தத்தில்) கலந்தனவாம். 5

न चैतद्विद्मः कतरन्नो गरीयो
यद्वा जयेम यदि वा नो जयेयुः।
यानेव हत्वा न जिजीविषाम-
स्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः॥ ६॥

மேலும், நாம் இவர்களை வெல்லுதல், இவர்கள் நம்மை வெல்லுதல்—இவற்றுள் எது நமக்கு மேன்மை யென்பது விளங்கவில்லை. எவரைக் கொன்ற பின் நாம் உயிர் கொண்டு வாழ விரும்போமோ, அத்தகைய திருதராஷ்ட்ரக் கூட்டத்தார் போர் முனையில் வந்து நிற்கிறார்கள். 6

कार्पण्यदोषोपहतस्वभावः
पृच्छामि त्वां धर्मसम्मूढचेताः।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे
शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्॥ ७॥

சிறுமையாகிய குறையால் இயல்பு அழிந்த
னாய், அறம் இன்னது என்றுணராமல் மயங்கிய
அறிவுடன், யான் உன்னைக் கேட்கிறேன். எது
நன்றென்பதை எனக்கு நிச்சயப் படுத்திச்
சொல்லுக, நான் உன் சீடன். உன்னையே சரண
மெனப் புகுந்தேன். கட்டளை தருக. 7

न हि प्रपश्यामि ममापनुद्याद्
यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं
राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८॥

பூமியின்மேல் நிகரில்லாத செல்வமுடைய
ராஜ்யம் பெறினும், அன்றி வானோர்மிசை
ஆட்சி பெறினும் புலன்களை யடர்க்கும் இயல்
புடைய இந்தத் துயர் எம்மை விட்டு நீங்கு
மென்று தோன்றவில்லை. 8

सञ्जय उवाच—

एवमुक्त्वा हृषीकेशं
गुडाकेशः परन्तपः ।
न योत्स्य इति गोविन्द-
मुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—

பகைவரைக் கொளுத்தும் பார்த்தனங்கு
பசு நிரை காக்கும் பகவனை நோக்கிப்
"போரினிப் புரியேன்" என்று
வாய் புதைத்திருந்தான். 9

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १० ॥

பாரதா, அப்போது கண்ணன் புன்னகை பூத்து, இரண்டு படைகளுக்கும் நடுவே துயருற்று நின்ற பார்த்தனை நோக்கி இவ்வசன முரைக்கிறான்:— 10

श्रीभगवानुवाच—

अशोच्यानन्वशोचस्त्वं
प्रज्ञावादांश्च भाषसे।
गतासूनगतासूंश्च
नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறன்—

துயர்ப் படத் தகாதார் பொருட்டுத்
துயர்ப் படுகின்றாய்.
ஞான வுரைகளு முரைக்கிறாய்!
இறந்தார்க் கேனும் இருந்தார்க் கேனுந்
துயர் கொளார் அறிஞர். 11

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

இதன் முன் எக்காலத்திலும் நான் இல்லா திருந்திலேன். நீயும் இங்குள்ள வேந்தர் யாவரும் அப்படியே. இனி நாம் என்றைக்கும் இல்லாமற் போகவும் மாட்டோம். 12

**देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।**
**तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥**

ஆத்மாவுக்கு இவ்வுடலில் எங்ஙனம் பிள்ளைப் பிராயமும், இளமையும், மூப்புந் தோன்றுகின் றனவோ, அங்ஙனமே மற்றொரு சரீரப் பிறப்புந் தோன்றுகிறது. தீரன் அதில் கலங்கமாட்டான்.

**मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।**
**आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥**

குந்தியின் மகனே, குளிரையும் வெப்பத்தை யும், இன்பத்தையும் துன்பத்தையுந் தரும் இயற்கையின் தீண்டுதல்கள் தோன்றி மறை யும் இயல்புடையன, என்று மிருப்பனவல்ல. பாரதா, அவற்றைப் பொறுத்துக்கொள். 14

**यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।**
**समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥**

யாவன் இவற்றால் துயர்ப் படான், இன்ப முந் துன்பமு நிகரெனக் கொள்வான், அந்த தீரன், சாகா திருக்கத் தகுவான். 15

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥

இல்லாதது உண்மை யாகாது. உள்ளது இல்லாத தாகாது. உண்மை யறிவார் இவ் விரண்டுக்கு முள்ள வேற்றுமை யுணர்வார். 16

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७॥

இவ்வுலக முழுதிலும் பரந்து நிற்கும் பொருள் அழிவற்றதென்றறி; இது கேடற்றது; இதனை யழித்தல் யார்க்கும் இயலாது. 17

अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥१८॥

ஆத்மா சாதன்; அழிவற்றான்; அளவிடத் தகாதான். எனினும் அவனுடைய வடிவங்கள் இறுதியுடையன என்பார். ஆதலால், பாரதா, போர் செய். 18

य एनं वेत्ति हन्तारं
यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो
नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

இவன் கொல்வா னென்று நினைப்போனும்,
கொல்லப் படுவானென்று நினைப்போனும்—
இருவரும் அறியாதார். இவன் கொல்வது
மில்லை, கொலை யுண்பது மில்லை. 19

न जायते म्रियते वा कदाचि-
न्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

இவன் பிறப்பது மில்லை; எக்காலத்திலும்
இறப்பது மில்லை. இவன் ஒரு முறையிருந்து
பின்னர் இல்லாது போவது மில்லை. இவன்
பிறப்பற்றான்; அனவரதன். இவன் சாசுவதன்;
பழையோன்; உடம்பு கொல்லப் படுகையில்
இவன் கொல்லப் படான். 20

**वेदाऽविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।**
**कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥**

இப் பொருள் அழிவற்றது, பிறப்பற்றது, என்று முளது—இங்ஙன முணர்வான் கொல்வ தெவனை? அவன் கொல்விப்ப தெவனை? 21

**वासांसि जीर्णानि यथा विहाय**
**नवानि गृह्णाति नरोऽपराणि ।**
**तथा शरीराणि विहाय जीर्णा-**
**न्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥**

நைந்த துணிகளைக் கழற்றி யெறிந்து விட்டு, மனிதன் புதிய துணிகள் கொள்ளுமாறு போல, ஆத்மா நைந்த உடல்களைக் களைந்து புதியன வற்றை எய்துகிறான். 22

**नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।**
**न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३॥**

இவனை ஆயுதங்கள் வெட்ட மாட்டா; தீ எரிக்காது, நீர் இவனை நனைக்காது. காற் றுலர்த்தாது. 23

**अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।**
**नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥**

பிளத்தற் கரியவன்; எரித்தற்கும், நனைத்தற்
கும், உலர்த்துதற்கும் அரியவன், நித்யன்; எங்
கும் நிறைந்தவன், உறுதி யுடையான், அசையா
தான். என்று மிருப்பான். 24

**अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।**
**तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥**

தெளிதற் கரியான் சிந்தனைக் கரியான்
மாறுத லில்லாதா னென்ப!
ஆதலால் இவனை இங்ஙனம் அறிந்து நீ
துயர்ப் படா திருக்கக் கடவாய். 25

**अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।**
**तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥ २६॥**

அன்றி, நீ இவனை நித்தமும் பிறந்து நித்த
மும் மடிவானென்று கருதினால், அப்போதும்,
பெருந்தோளுடையாய், நீ இவன் பொருட்டுத்
துயருறல் தகாது. 26

जातस्य हि ध्रुवो मृत्यु-
ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे
न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥

பிறந்தவன் சாவது உறுதி யெனில், செத்தவன் பிறப்பது உறுதி யெனில், இந்த விலக்கொணாச் செய்திக்கு நீ அழுங்குதல் தகுதி யன்று. 27

अव्यक्तादीनि भूतानि
व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव
तत्र का परिदेवना ॥ २८ ॥

பாரதா, உயிர்களின் ஆரம்பம் தெளிவில்லை; நடு நிலைமை தெளிவுடையது; இவற்றின் இறுதி யும் தெளிவில்லை. இதில் துயர்ப் படுவ தென்னே? 28

आश्चर्यवत्पश्यति कश्चिदेन-
माश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति
श्रुत्वाऽप्येनं वेद न चैव कश्चित् ॥ २९ ॥

இந்த ஆத்மாவை

வியப்பென ஒருவன் காண்கிறான்,
வியப்பென ஒருவன் சொல்லுகிறான்,
வியப்பென ஒருவன் கேட்கிறான்,
கேட்கினும், இதனை அறிவான் எவனுமிலன்.
29

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥

பாரதா, எல்லாருடம்பிலுமுள்ள இந்த ஆத்மா கொல்ல முடியாதவன், ஆதலால் நீ எந்த உயிரின் பொருட்டும் வருந்துதல் வேண்டா, 30

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥

ஸ்வதர்மத்தைக் கருதியும் நீ நடுங்குதல் இசையாது. அறப் போரைக் காட்டிலும் உயர்ந்ததொரு நன்மை மன்னர்க்கில்லை. 31

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥

தானே வந்தெய்துவது, திறந்து கிடக்கும் பொன்னுலக வாயில் போன்றது, இத்தகைய போர் கிடைக்கப் பெறும் மன்னர் இன்ப முடையார். 32

अथ चेत्त्वमिमं धर्म्यं सङ्ग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥

அன்றி நீ இந்த தர்ம யுத்தத்தை நடத்தாமல் விடுவாயானால், அதனால் ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் கொன்று பாவத்தை யடைவாய். 33

**अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम्**
**सम्भावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥**

உலகத்தார் உனக்கு மாறாத வசையு முரைப்பார்கள். புகழ் கொண்டோன் பின்ன ரெய்தும் அபகீர்த்தி மரணத்திலுங் கொடிதன்றோ? 34

**भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।**
**येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥**

நீ அச்சத்தால் போரை விட்டு விலகியதாக மஹாரதர் கருதுவார்கள். அவர்களுடைய நன்கு மதிப்பைப் பெற்ற நீ இதனால் சிறுமை யடைவாய். 35

**अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।**
**निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥**

உனக்கு வேண்டாதார் சொல்லத் தகாத வார்த்தைகள் பல சொல்லுவார்கள். உன் திறமையைப் பழிப்பார்கள். இதைக்காட்டிலும் அதிகமான துன்பமேது? 36

हतो वा प्राप्स्यसि स्वर्गम्
जित्वा वा भोक्ष्यसे महीम् ।
तस्मादुत्तिष्ठ कौन्तेय
युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥

கொல்லப் படினே வானுல கெய்துவாய்.
வென்றால் பூமியாள்வாய். ஆதலால் போர்
செயத் துணிந்து நீ எழுந்து நில். 37

सुखदुःखे समे कृत्वा
लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व
नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥

இன்பம், துன்பம், இழவு, பேறு, வெற்றி,
தோல்வி ; இவற்றை நிகரெனக் கொண்டு நீ,
போர்க் கொருப் படுக. இவ்வணம் புரிந்தால்
பாவ மெய்தாய். 38

एषा तेऽभिहिता साङ्ख्ये
बुद्धिर्योगे त्विमां शृणु ।
बुद्ध्या युक्तो यया पार्थ
कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥

இங்ஙனம் உனக்கு ஸாங்க்ய வழிப்படி புத்தி
சொன்னேன். இனி யோக வழியால் சொல்லு
கிறேன்; கேள். இந்த புத்தி கொண்டவன்
கர்மத் தளைகளைச் சிதறி விடுவான். 39

नेहाभिक्रमनाशोऽस्ति
प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य
त्रायते महतो भयात् ॥ ४० ॥

இதில் முயற்சிக் கழிவில்லை. இது வரம்பு
மீறிய செய்கையுமன்று. இந்த தர்மத்தில் சிறி
திருப்பினும், அஃதொருவனைப் பேரச்சத்தி
னின்று காப்பாற்றும். 40

व्यवसायात्मिका बुद्धि-
रेकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च
बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

குருகுலத்தோன்றலே! உறுதியுடைய புத்தி இவ்வுலகத்தில் ஒருமையுடையது. உறுதி யில்லாதோரின் மதி பலகிளைப்பட்டது, முடிவற்றது. 41

यामिमां पुष्पितां वाचं
प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ
नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥

வேதங்களின் வெளியுரையில் மகிழ்வார் சிலர், பூக்களைப்போன்ற (அலங்காரச்) சொற்கள் பேசுகிறார்கள். தமது கொள்கை யொழிய மற்றது பிழை யென்கிறார்கள். 42

**कामात्मानः स्वर्गपरा**
**जन्मकर्मफलप्रदाम् ।**
**क्रियाविशेषबहुलां**
**भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥**

இவர்கள் காமிகள்; ஸ்வர்க்கத்தைப் [illegible] மாகக் கொண்டோர். பிறப்புக்கும் தொழி[illegible] கும் பயன் வேண்டுவோர்; போகத்தை[illegible] ஆட்சியையும் வேண்டுவோர்; பலவகை[illegible] கிரியைகளைக் காட்டிப் பேசுகிறார்கள்.

**भोगैश्वर्यप्रसक्तानां**
**तयाऽपहृतचेतसाम् ।**
**व्यवसायात्मिका बुद्धिः**
**समाधौ न विधीयते ॥ ४४ ॥**

இவர்கள் சொல்வதைக் கேட்டு மதி[illegible] போகத்திலும் ஆட்சியிலும் பற்[illegible] ருடைய நிச்சயபுத்தி ஸமாதியில் [illegible] பெறாது.

**त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।**
**निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥**

மூன்று குணங்களுக் குட்பட்டவற்றைக் குறித்து வேதங்கள் பேசுகின்றன. அர்ஜுனா, நீ மூன்று குணங்களையுங் கடந்தோனாகுக. *இருமைகளற்று, எப்போதும் உண்மையில் நின்று, யோக க்ஷேமங்களைக் கருதாமல், ஆத்மாவை வசப்படுத்தியவனாகுக. 45

**यावानर्थ उदपाने सर्वतः सम्प्लुतोदके ।**
**तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥**

எங்கும் நீர் நிரம்பிய இடத்தில் ஒரு சிறு குட்டம் என்ன பொருளுடையது; அன்ன பொருளே ஞானமுடைய பிராமணனுக்கு வேதங்களுமுடையன. 46

---

*இருமைகள் : நன்மை தீமை, ஒளி இருள், குளிர் வெப்பம் போன்ற இரட்டை நிலைகள்.

कर्मण्येवाधिकारस्ते
मा फलेषु कदाचन।
मा कर्मफलहेतुर्भू-
र्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥

தொழில் செய்யத் தான் உனக்கதிகார முண்டு. அதன் பயன்களில் எப்போதுமே உனக்கதிகாரமில்லை. செய்கையின் பயனைக் கருதாதே; தொழில் செய்யாமலுமிராதே. 47

योगस्थः कुरु कर्माणि
सङ्गं त्यक्त्वा धनञ्जय।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा
समत्वं योग उच्यते ॥ ४८ ॥

தனஞ்ஜயா, யோகத்தில் நின்று, பற்றை நீக்கி, வெற்றி தோல்விகளை நிகரெனக்கொண்டு தொழில்களைச் செய்க. நடுநிலையே யோக மெனப்படும். (48)

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

தனஞ்ஜயா, *புத்தி யோகத்தைக் காட்டிலும் கர்மம் நெடுந்தொலை தாழ்ந்தது. புத்தியைச் சரணடை. பயனைக் கருதுவோர் லோபிகள். (49)

बुद्धियुक्तो जहातीह
उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व
योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

புத்தி யுடையவன் இங்கு நற்செய்கை தீச்செய்கை இரண்டையுந் துறக்கிறான். ஆதலால் நீ யோகத்திலே பொருந்திவிடு. யோகம் செயல்களில் திறமையாம். (50)

---

*புத்தி யோகம்=புத்தியில் லயித்து நிற்றல், கர்மம்=தொழில்.

**कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।**
**जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥**

புத்தியுடைய மேதாவிகள் செய்கையில் விளை-யும் பயனைத் துறந்து, பிறவித் தளை நீங்கி ஆனந்தபதவி யடைகிறார்கள்.

**यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।**
**तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥**

உனது புத்தி மோஹக் குழப்பத்தை கடந்து செல்லுமாயின், அப்போது கேட்கப் போவது கேட்கப்பட்டது என்ற இரண்டிலும் உனக்கு வேதனை யேற்படாது.

**श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।**
**समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥**

உனது புத்தி கேள்வியிலே கலக்கமுறாததாய் உறுதி கொண்டு, ஸமாதி நிலையில் அசையாது நிற்குமாயின், அப்போது யோகத்தை அடை-வாய்.

[illegible]—

[illegible] का भाषा समाधिस्थस्य केशव।
[illegible] किं प्रभाषेत किमासीत व्रजेत किम्॥

[illegible] சொல்லுகிறன்:—

[illegible] உறுதி கொண்ட அறிவுடன் ஸமாதி [illegible] எவ்வாறு பேசுவான்? ஸ்திர [illegible] உடையவன் என்ன சொல்வான்? எப்படி [illegible]? எதனை யடைவான்? 54

[illegible]—

[illegible] यदा कामान्सर्वान्पार्थ मनोगतान्।
[illegible]त्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥५५॥

[illegible] சொல்லுகிறன்:—

[illegible], ஒருவன் தன் மனதில் எழும் விருப் [illegible]த்தையும் துறந்து தன்னிலே தான் [illegible]பெறுவானாயின், அப்போது ஸ்திர புத்தி [illegible]னென்று சொல்லப்படுகிறான். 55

दुःखेष्वनुद्विग्नमनाः
सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः
स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

துன்பங்களிலே மனங்கெடாதவனாய்,
இன்பங்களிலே ஆவலற்றவனாய்,
அச்சமும் சினமுந் தவிர்த்தானாயின்
அம் முனி,
மதியிலே யுறுதி வாய்ந்தவ னென்ப. 56

यः सर्वत्रानभिस्नेह-
स्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि
तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

எவன் நல்லதும் கெட்டதும் வருமிடத்தே எதனிலும் வீழ்ச்சியற்றவனாய், ஆவலுறுவதும் பகைப்பது மின்றி யிருப்பானோ, அவனுடைய அறிவே நிலை கொண்டது. 57

**यदा संहरते चायं**
**कूर्मोऽङ्गानीव सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्य-**
**स्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥**

ஆமை தன் அவயவங்களை இழுத்துக் கொள்வதுபோல், எப்புறத்தும் விஷய பதார்த்தங்களினின்று புலன்களை யொருவன் மீட்க வல்லானயின், அவனறிவே நிலைகொண்டது. 58

**विषया विनिवर्तन्ते**
**निराहारस्य देहिनः ।**
**रसवर्जं रसोऽप्यस्य**
**परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥**

தம்மைக் கவராத ஜீவனிடமிருந்து விஷயங்கள் தாமே விலகிக்கொள்ளுகின்றன. எனினும் அவற்றிட முள்ள சுவையை இவன் மறப்பதில்லை. பரம் பொருளைக் காண்பானயின் அச் சுவையுந் தீர்ந்துவிடும். 59

**यततो ह्यपि कौन्तेय**
**पुरुषस्य विपश्चितः ।**
**इन्द्रियाणि प्रमाथीनि**
**हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥**

குந்தியின் மகனே, (தவ) முயற்சியுடைய புருஷனிடத்திலே கூட இந்திரியங்கள் வரம்பு கடந்து செல்லும்போது தம்முடன் மனத்தையும் வலிய வாரிச் செல்கின்றன. 60

**तानि सर्वाणि संयम्य**
**युक्त आसीत मत्परः ।**
**वशे हि यस्येन्द्रियाणि**
**तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥**

அவற்றை யெல்லாம் நன்றாக அடக்கி, யோகத்தில் அமர்ந்தவனாய், என்னைப் பரமாகக் கொண்டு, புலன்களை வசப் படுத்தி வைத்திருப்பவன் எவனோ, அவனுடைய அறிவே நிலை கொண்டது. 61

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥

மனிதன் விஷயங்களைக் கருதும்போது அவற்றில் பற்றுத லுண்டாகிறது. பற்றுதலால் விருப்ப முண்டாகிறது. விருப்பத்தால் சினம் பிறக்கிறது. 62

क्रोधाद्भवति सम्मोहः सम्मोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥

சினத்தால் மயக்கம்; மயக்கத்தால் நினைவுத் தவறுதல்; நினைவுத் தவறுதலால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் அழிகிறான். 63

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥६४॥

விழைதலும் பகைத்தலு மின்றித் தனக்கு வசப்பட்ட புலன்களுடன் விஷயங்களிலே ஊடாடுவோனாய்த் தன் விதிக்குத் தான் உட்பட்ட மனிதன் ஆறுதலடைகிறான். 64

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

சாந்தி நிலையில் மனிதனுக்கு எல்லாத் துன்பங்களும் அழிகின்றன. சித்தம் சாந்தி பெற்ற பின் ஒருவனுடைய புத்தி விரைவிலே நிலைப்படுகிறது. 65

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥

யோகமில்லாதவனுக்கு புத்தியில்லை. யோகமில்லாதவனுக்கு மனோபாவனையில்லை. மனோபாவனையில்லாதவனுக்கு சாந்தியில்லை. சாந்தியில்லாதவனுக்கு இன்பமேது? 66

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७॥

இந்திரியங்கள் சலிக்கையில் ஒருவனுடைய மனமும் அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாயின், அம்மனம் கடலில் தோணியைக் காற்று மோதுவது போல் அறிவை மோதுகிறது. 67

तस्माद्यस्य महाबाहो
निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्य-
स्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

ஆதலால், பெருந் தோளாய், யாங்கணும் விஷயங்களினின்றும் இந்திரியங்களைக் கட்ட வல்லான் எவனோ, அவனறிவே நிலை கொண்டது. 68

या निशा सर्वभूतानां
तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि
सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

எல்லா உயிர்களுக்கும் இரவாகிய நேரத்தில், (தன்னைக் கட்டிய) முனி விழித்திருக்கிறான். மற்ற உயிர்கள் விழித்திருக்கும் நேர மெதுவோ அதுவே முனிக் கிரவு. 69

**आपूर्यमाणमचलप्रतिष्ठं**
**समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।**
**तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे**
**स शान्तिमाप्नोति न कामकामी ॥ ७० ॥**

கடலில் நீர்த் தொகுதிகள் வந்து விழுகையில் அது மேன்மேலும் நிரப்புதற் குரிதாய் அசையா நிலை கொண்டிருப்பது போலே, விருப்பங்கள் தன்னுள்ளே புகும்போது இயல்வான் எவனோ அவன் சாந்தி யடைகிறான். விருப்பங்களை விரும்புவோன் அதனை யடையான். 70

**विहाय कामान्यः सर्वा-**
**न्पुमांश्चरति निःस्पृहः ।**
**निर्ममो निरहंकारः**
**स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥**

இச்சை யற்றான், எல்லா இன்பங்களையுந் துறந்தான், என தென்பதற்றான், யா னென்ப தற்றான், அவனே சாந்தி நிலை யடைகிறான். 71

षा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥

பார்த்தா, இது பிரம ஸ்திதி. இதை யடைந்
தோன் பிறகு மயங்குவதில்லை. இறுதிக் காலத்தி
லேனும் இதில் நிலை கொள்வோன் பிரம நிர்
வாண மெய்துகிறான். 72

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
सांख्ययोगो नाम
द्वितीयोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும், பிரம வித்தையும்,
யோக சாஸ்த்ரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "ஸாங்க்ய யோகம்" என்ற
இரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

# तृतीयोऽध्यायः

## மூன்றாம் அத்யாயம்.

### கர்மயோகம்.

अर्जुन उवाच—

**ज्यायसी चेत्कर्मणस्ते**
**मता बुद्धिर्जनार्दन ।**
**तत्किं कर्मणि घोरे मां**
**नियोजयसि केशव ॥ १ ॥**

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

ஜநார்த்தன, செய்கையைக் காட்டிலும் புத்தியே சிறந்த தென்பது நின் கொள்கையாயின் இந்தக் கொடிய செய்கையில் என்னைப் புகுத்துவதென்னே, கேசவா?

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥२॥

குழப்பமான பேச்சினால் என் புத்தியை மயங்கச் செய்கிறாய். ஆதலால் எது எனக்கு நன்மை தருமென்பதை உறுதிப்படுத்தி ஒரே வார்த்தையாகச் சொல். 2

श्रीभगवानुवाच—

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा
पुरा प्रोक्ता मयाऽनघ ।
ज्ञानयोगेन साङ्ख्यानां
कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

பாபமொன்று மில்லாத அர்ஜுனா, இவ்வுலகத்தில் இரண்டுவித நிஷ்டை முன்னர் என்னால் கூறப்பட்டது, ஸாங்க்யர்களின் ஞான யோகத்தால் எய்துவது, யோகிகளின் கர்ம யோகத்தால் எய்துவது என. 3

**न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।**
**न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥**

தொழில்களைத் தொடங்காமலே யிருப்பதனால் மனிதன் செயலற்ற நிலை யடைவதில்லை. துறவினாலேயே மனிதன் ஈடேற்றம் பெற்று விட மாட்டான். 4

**न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**
**कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥**

எவனும் ஒரு கணப் பொழுதேனும் செய்கையின்றி யிருப்பதில்லை. இயற்கையில் விளையும் குணங்களே எல்லா உயிர்களையும் அவசமாகத் தொழில் புரிவிக்கின்றன. 5

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥**

கர்மேந்திரியங்களை அடக்கிக் கொண்டு, ஆனால், இந்திரிய விஷயங்களை மனதால் ஸ்மரித்துக் கொண்டிருப்போனாகிய மூடாத்மா பொய்யொழுக்க முடையவனென்று சொல்லப்படுகிறான். 6

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥

அர்ஜுனனே, எவன் இந்திரியங்களை மனதால் கட்டுப்படுத்திக்கொண்டு, கர்மேந்திரியங்களால் கர்ம யோகம் பண்ணுகிறானோ, அவன் சிறந்தவன். 7

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

விதிக்கப்பட்ட தொழிலை நீ செய். தொழில் தொழிலின்மையைக் காட்டிலும் சிறந்ததன்றோ? தொழிலின்றி இருப்பதால் உடம்பைக் கொண்டு செலுத்துதல்கூட உனக்கியலாமல் போய் விடும். 8

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥ ९ ॥

வேள்வியின் பொருட்டென்று செய்யப்படுவது தவிர மற்றைத் தொழில் மனிதருக்குத் தளையாகிறது. ஆதலால், குந்தி மகனே, பற்றைக் களைந்து தொழில் செய்துகொண்டிரு. 9

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा
पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्व-
मेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

முன்பு பிரம தேவன் வேள்வியுடனே உயிர்க் குலத்தை ஒருமிக்கப் படைத்துச் சொல்லினான்: "இதனால் பல்குவீர்கள், நீங்கள் விரும்பும் விருப் பங்களை யெல்லாம் உங்களுக் கிது கறந்து தரும்." 10

देवान्भावयतानेन
ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः
श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

இதனால் தேவர்களைக் கருதக் கடவீர்; அந்த தேவர் உங்களைக் கருதக் கடவர். (இங்ஙனம்) பரஸ்பரமான பாவனை செய்வதனால் உயர்ந்த நலத்தை எய்துவீர்கள். 11

**इष्टान्भोगान्हि वो देवा**
**दास्यन्ते यज्ञभाविताः ।**
**तैर्दत्तानप्रदायैभ्यो**
**यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२ ॥**

வேள்வியில் பாவனை செய்யப்பட்ட தேவர் உங்களுக்கு விரும்பிய போகங்களை யெல்லாந் தருவர். அவர்களுக்குக் கைம்மாறு செலுத்தாமல் அவர்கள் கொடுப்பதை உண்போன் கள்வனே யாவான். 12

**यज्ञशिष्टाशिनः सन्तो**
**मुच्यन्ते सर्वकिल्बिषैः ।**
**भुञ्जते ते त्वघं पापा**
**ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥**

வேள்வியின் மிச்சத்தை யுண்ணும் நல்லோர் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். தம் பொருட்டென்று மாத்திரமே உணவு சமைக்கும் பாவிகள் பாவத்தை உண்ணுகிறார்கள். 13

**अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसम्भवः ।**
**यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥**

அன்னத்தால் உயிர்கள் சமைகின்றன. மழையால் உணவு தோன்றுகிறது. மழை வேள்வியால் ஆகிறது. வேள்வி செய்கையினின்று பிறப்பது. 14

**कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माऽक्षरसमुद्भवम् ।**
**तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥१५॥**

செய்கை பிரமத்தினின்றும் பிறப்பதென்றுணர். பிரமம் அமிர்தத்தில் தோன்றுவது. ஆதலால் எங்கும் நிறைந்த பிரமம் எப்போதும் வேள்வியில் நிலைபெற்றது. 15

**एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।**
**अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥**

இங்ஙனம் சுழலும் வட்டத்தை இவ்வுலகில் பின்பற்றி ஒழுகாதோன் பாப வாழ்க்கை யுடையான், புலன்களிலே களித்தான்; பார்த்தா, அவன் வாழ்க்கை விழலேயாம். 16

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च सन्तुष्टस्तस्य कार्यं न विद्यते ॥१७॥**

தன்னிலே தான் இன்புறுவான், தன்னிலே தான் திருப்தி யடைவான், தன்னிலே தான் மகிழ்ந்திருப்பான், அவனுக்குத் தொழிலில்லை. 17

**नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।**
**न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥**

அவனுக்குச் செய்கையில் யாதொரு பயனு மில்லை; செயலின்றி யிருப்பதிலும் அவனுக்குப் பயனில்லை. எவ்விதம் பயனையுங் கருதி அவன் எந்த உயிரையுஞ் சார்ந்து நிற்ப தில்லை. 18

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।**
**असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥**

ஆதலால், எப்போதும் பற்று நீங்கிச் செய்யத் தக்க தொழிலைச் செய்துகொண்டிரு. பற்றில்லாமல் தொழில் செய்துகொண்டிருக்கும் மனிதன் பரம்பொருளை எய்துகிறான். 19

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसङ्ग्रहमेवापि सम्पश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

ஜனகன் முதலியோர் செய்கையாலேயே ஸித்தி பெற்றார்கள். உலக நன்மையைக் கருதியும் நீ தொழில் புரிதல் தகும். 20

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

எதனை யெதனை உயர்ந்தோன் செய்கிறானோ, அதையே மற்ற மனிதர் பின்பற்றுகிறார்கள். அவன் எதை ப்ரமாணமாக்குகிறானோ, அதையே உலகத்தார் தொடருகிறார்கள். 21

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२॥

பார்த்தா, மூன்றுலகத்திலும் எனக்கு யாதொரு கடமையுமில்லை. நான் பெற்றிராத பேறுமில்லை. எனினும் நான் தொழிலிலே தான் இயங்குகிறேன். 22

**यदि ह्यहं न वर्तेयं**
**जातु कर्मण्यतन्द्रितः ।**
**मम वर्त्मानुवर्तन्ते**
**मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥**

நான் சோம்பரில்லாமல் எப்போதும் தொழில் செய்துகொண்டிராவிடின், பார்த்தா, எல்லாப் பக்கங்களிலும் மனிதர் என் வழியையே பின் பற்றுவார்கள். 23

**उत्सीदेयुरिमे लोका**
**न कुर्यां कर्म चेदहम् ।**
**सङ्करस्य च कर्ता स्या-**
**मुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥**

நான் தொழில் செய்யாவிட்டால், இந்த ஜனங்களெல்லாரும் அழிந்துபோவார்கள்; குழப்பத்தை நான் ஆக்கியோன் ஆவேன்; இந்த மக்களை யெல்லாங் கொல்வோனுவேன். 24

सक्ताः कर्मण्यविद्वांसो
यथा कुर्वन्ति भारत ।
कुर्याद्विद्वांस्तथाऽसक्त-
श्चिकीर्षुर्लोकसङ्ग्रहम् ॥ २५ ॥

பாரதா, அறிவில்லாதார் செய்கையில் பற்றுடையோராய் எப்படித் தொழில் செய்கிறார்களோ, அப்படியே அறிவுடையோன் பற்றை நீக்கி உலக நன்மையை நாடித் தொழில் செய்ய வேண்டும்.

न बुद्धिभेदं जनये-
दज्ञानां कर्मसङ्गिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि
विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

அறிவுடையோன் தொழிலிற் பற்றுதல்கொண்ட அஞ்ஞானிகளுக்கு புத்திபேதம் விளைவிக்கக்கூடாது. அவன் யோகத்தில் நின்று தொழில் செய்து எல்லாத் தொழில்களையும் கவர்ச்சியுடையன வாக்கவேண்டும்.

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहङ्कारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७ ॥

எல்லாத் தொழில்கள் இயற்கையின் குணங்களால் செய்யப்படுகின்றன. அஹங்காரத்தால் மயங்கியவன் "நான் செய்கிறேன்" என்று நினைக்கிறான். 27

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥

குணம், செய்கை இவற்றுடைய பிரிவுகளின் உண்மை அறிந்தோன் 'குணங்கள் குணங்களில் இயலுகின்றன' என்று கருதிப் பற்றற்றிருப்பான். 28

प्रकृतेर्गुणसम्मूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥

இயற்கையின் குணங்களால் மயங்கியவர்கள் குணங்களிலும் தொழில்களிலும் பற்றுதலடைகிறார்கள். சிற்றறிவுடைய அந்த மந்தர்களை முழுதுணர்ந்த ஞானி உழல்விக்கக் கூடாது. 29

**मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।**
**निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३०**

எல்லாச் செய்கைகளையும் உள்ளறிவினால் எனக்கு அர்ப்பணமாகத் துறந்துவிட்டு, ஆசை நீங்கி, எனது என்பது அற்று, மனக் காய்ச்சல் தீர்ந்தவனாய்ப் போர் செய்யக்கடவாய். 30

**ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।**
**श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥**

என்னுடைய இந்த நித்யமான கொள்கையை எந்த மனிதர் சிரத்தை யுடையோராய்ப் பொறாமை யின்றிப் பின்பற்றுகிறார்களோ, அவர்களும் தொழில்களிலிருந்து விடுபடுகிறார்கள். 31

**ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।**
**सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥**

என்னுடைய இக் கொள்கையை யாவர் பொறாமையால் பின்பற்றாது விடுகிறார்களோ, எவ்வித ஞானமு மில்லாத அம் மூடர்களை நாச மடைந்தோராகவே தெரிந்துகொள். 32

**सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।**
**प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥**

ஞானமுடையவன் கூடத் தன் இயற்கைக்குத் தக்கபடியே நடக்கிறான். உயிர்கள் இயற்கைப்படி நடக்கின்றன. அடக்குதல் பயன்படாது. 33

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।**
**तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥**

இந்திரியத்துக்கு இந்திரிய விஷயத்தில் விருப்பு வெறுப்புக்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவ்விரண்டுக்கும் ஒருவன் வசப்படலாகாது. இவை இவனுக்கு வழித்தடைகளாம். 34

**श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।**
**स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥**

நன்றாகச் செய்யப்படும் பர தர்மத்தைக் காட்டிலும் குணமற்றதெனினும் ஸ்வதர்மமே சிறந்தது. ஸ்வதர்மத்தில் இறந்துவிடினும் நன்றேயாம். பர தர்மம் பயத்துக்கிடமானது. 35

अर्जुन उवाच—

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः॥**

அர்ஜுனன் சொல்லுகிறன்—

வ்ருஷ்ணி குலத் தோன்றலே, மனிதனுக்கு இச்சை யில்லாதபோதும் அவனை வலியக் கொண்டு புகுத்துவதுபோல் தூண்டிப் பாவம் செய்விப்பது யாது? 36

श्रीभगवानुवाच—

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः।**
**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम्॥३७॥**

ஸ்ரீ பகவான் சொல்லுகிறன்—

அஃது விருப்பமும் சினமும்; ரஜோ குணத்திற் பிறப்பது; பேரழிவு செய்வது; பெரும் பாவம். இதனை இங்கு சத்துருவாகத் தெரிந்து கொள். 37

धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

புகையினால் தீ சூழப்பட்டிருப்பது போலவும், கண்ணாடி அழுக்கால் மாசு படுவது போலவும், கர்ப்பத்தைக் கருப்பை சூழ்ந்திருப்பது போலவும், இது இவ் வுலகைச் சூழ்ந்திருக்கிறது. 38

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

குந்தியின் மகனே, விருப்ப மெனப்படும் இந் நிரப்பொணுத் தீ ஞானிக்கு நித்யப் பகையாம் ஞானத்தைச் சூழ்ந்து நிற்கிறது. 39

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

இந்திரியங்களும், மனமும், புத்தியும் இதற்கு நிலைக்களன் என்பர். இவற்ருல் இது ஞானத்தைச் சூழ்ந்து மனிதனை மயங்குவிக்கிறது. 40

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ
नियम्य भरतर्षभ।
पाप्मानं प्रजहि ह्येनं
ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

ஆதலால் பாரத ரேறே, நீ தொடக்கத்தில் இந்திரியங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் அழிப்பதாகிய இந்தப் பாவத்தைக் கொன்றுவிடு. 41

इन्द्रियाणि पराण्याहु-
रिन्द्रियेभ्यः परं मनः।
मनसस्तु परा बुद्धि-
र्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

இந்திரியங்களை உயர்வுடையன வென்பர். அவற்றிலும் மனம் மேல்; மனத்தைக் காட்டிலும் புத்தி மேல்; புத்திக்கு மேலே அவன் (ஆத்மா). 42

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

இங்ஙனம் புத்திக்கு மேலான பொருளை (ஆத்மாவை) உணர்ந்து, தன்னைத்தான் உறுதிப்படுத்திக் கொண்டு, வெல்லற்கரிய விருப்பமாம் பகையைக் கொல்லக் கடவாய், பெருந்தோளுடையாய்! 43

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
कर्मयोगो नाम
तृतीयोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் பிரம வித்தையும்
யோகசாஸ்த்ரமும் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையுமாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "கர்மயோகம்" என்ற
மூன்றும் அத்யாயம் முற்றிற்று.

# चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்யாயம்.

### ஞானயோகம்.

श्रीभगवानुवाच—

इमं विवस्वते योगं
प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह
मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

இந்த அழிவற்ற யோகத்தை நான் முன்னர்
விவஸ்வானுக்குச் சொன்னேன். விவஸ்வான்
மனுவுக்குச் சொன்னான். மனு இக்ஷ்வாகு ராஜ
னுக்குக் கூறினான். 1

एवं परम्पराप्राप्त-
मिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता
योगो नष्टः परन्तप ॥ २ ॥

இவ்வாறு பரம்பரையாகக் கிடைத்த இதனை ராஜ ரிஷிகள் உணர்ந்திருந்தனர். பரந்தபா, அந்த யோகம் கால மிகுதியால் இவ்வுலகத்தில் இழக்கப்பட்டது. 2

स एवायं मया तेऽद्य
योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति
रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

அந்தப் பழைய யோகத்தையே இன்று நான் உனக்குச் சொன்னேன், நீ என் பக்தனும் தோழனு மென்பது கருதி. இது மிகவும் உயர்ந்த ரஹஸ்யம். 3

अर्जुन उवाच—

**अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।**
**कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥**

அர்ஜுனன் சொல்லுகிறான்—

உன் பிறப்புப் பிந்தியது; விவஸ்வானுடைய பிறப்பு முந்தியது. நீ இதை ஆதியில் சொன்னாயென்று நான் தெரிந்துகொள்வதெப்படி? 4

श्रीभगवानुवाच—

**बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।**
**तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप ॥ ५ ॥**

பகவான் சொல்லுகிறான்—

அர்ஜுனா, எனக்குப் பல ஜன்மங்கள் கழிந்திருக்கின்றன. உனக்கும் அப்படியே. பரந்தபா, நான் அவற்றை யெல்லாம் அறிவேன்; நீ அவற்றை அறிகிலை. 5

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय सम्भवाम्यात्ममायया ॥६॥

பிறப்பற்றேனெனினும், அழிவற்றேனெனினும், உயிர்களுக்கெல்லாம் ஈசனே யெனினும், யான் எனது ப்ரக்ருதியில் நிலை பெற்று ஆத்மமாயையால் பிறப்பெய்துகிறேன். 6

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

பாரதா, எப்பொழுதெப்போது தர்மம் அழிந்துபோய் அதர்மம் எழுச்சி பெறுமோ, அப்போது நான் என்னைப் பிறப்பித்துக்கொள்ளுகிறேன். 7

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय सम्भवामि युगे युगे ॥ ८ ॥

நல்லோரைக் காக்கவும், தீயன செய்வோரை அழிக்கவும், அறத்தை நிலை நிறுத்தவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன். 8

जन्म कर्म च मे दिव्य-
मेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म
नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

எனது தெய்வத்தன்மை கொண்ட பிறப்பும் செய்கையும் இங்ஙனமென்பதை உள்ளபடி யுணர்வோன் உடலைத் துறந்த பின்னர் மறு பிறப்பு எய்துவதில்லை, அர்ஜுனா! அவன் என்னை எய்துகிறான். 9

वीतरागभयक्रोधाः
मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा
पूता मद्भावमागताः ॥ १० ॥

விருப்பத்தையும், அச்சத்தையும், சினத்தையும் துறந்தோராய், என் மயமாய், என்னை அடைக்கலம் புகுந்து ஞானத் தவத்தால் தூய்மை பெற்று என்னியல்பு எய்தினோர் பலர்.

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥११॥**

யாவர் என்னை எங்ஙனம் வேண்டுகிறார்
களோ, அவர்களை நான் அங்ஙனமே சார்கிறேன்.
பார்த்தா, மனிதர் யாங்கணும் என் வழியையே
பின்பற்றுகிறார்கள். 11

**काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।**
**क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥१२॥**

தொழில்களில் வெற்றியை விரும்புவோர்
இங்கு தேவதைகளைப் பூஜை செய்கிறார்கள்.
மனித உலகத்தில் தொழிலினின்றும் வெற்றி
விரைவில் விளைவ தன்றோ? 12

**चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।**
**तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥१३॥**

குணத்துக்கும் செய்கைக்கும் தக்கபடி நான்
நான்கு வர்ணங்களைச் சமைத்தேன். செய்கை
யற்றவனும் அழிவற்றவனுமாகிய யானே அதற்
குச் செய்தோ னென்றுணர். 13

न मां कर्माणि लिम्पन्ति
न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति
कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

என்னைக் கர்மங்கள் ஒட்டுவதில்லை. எனக்குக் கர்மப்பயனில் விருப்ப மில்லை. இங்ஙனம் என்னை யறிவோன் கர்மங்களால் கட்டுப்பட மாட்டான்.

14

एवं ज्ञात्वा कृतं कर्म
पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं
पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

முற்காலத்தில் முக்தியை வேண்டியோரும் இதை யுணர்ந்து தொழில் செய்தனர். ஆதலால், முன்னோர்கள் முன்பு செய்தபடி, நீயும் தொழிலையே செய்யக்கடவாய்,

15

किं कर्म किमकर्मेति
कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि
यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

எது தொழில்; எது தொழிலல்லாதது என்ற விஷயத்தில் ஞானிகளும் மயக்க மெய்துகிறார்கள். ஆதலால் உனக்குத் தொழிலியல்பை உணர்த்துகிறேன். இதை அறிவதனால் நீ தீமையினின்றும் விடுபடுவாய். 16

कर्मणो ह्यपि बोद्धव्यं
बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं
गहना कर्मणो गतिः ॥ १७ ॥

தொழிலின் இயல்புந் தெரியவேண்டும்; தொழிற்கேட்டின் இயல்புந் தெரியவேண்டும்; தொழிலின்மையின் இயல்புந் தெரியவேண்டும். கர்மத்தின் நடை மிகவும் குழ்ந்தது. 17

कर्मण्यकर्म यः पश्ये-
दकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु
स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥

செய்கையில் செயலின்மையையும், செயலின்மையில் செய்கையையும் எவன் காணுகிறானோ, அவனே மனிதரில் அறிவுடையோன்; அவன் எத்தொழில் செய்கையிலும் யோகத்திலிருப்பான். 18

यस्य सर्वे समारम्भाः
कामसङ्कल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं
तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥

எவனுடைய செய்கைத் தொடக்கங்களெல்லாம் விருப்ப நினைவு தவிர்ந்தனவோ, அவனுடைய செயல்கள் ஞானத்தீயால் எரிக்கப்பட்டனவாம்; அவனை ஞானிகள் அறிவுடையோனென்கிறார்கள். 19

**त्यक्त्वा कर्मफलासङ्गं
नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि
नैव किञ्चित्करोति सः ॥ २० ॥**

கர்மப் பயனிலே பற்றுக் களைந்தவனாய் எப்போதும் திருப்தி யுடையோனாய் எதனிலும் சார்பற்று நிற்போன் செய்கை செய்துகொண் 20
டிருக்கையிலும் செயலற்றவனாவான்.

**निराशीर्यतचित्तात्मा
त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म
कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥**

ஆசை யற்றவனாய், சித்தத்தை ஆத்மாவால் கட்டுப்படுத்தி, எவ்வித தானங்களும் வாங்குவதைத் துறந்து, வெறுமே சரீரத் தொழில் மாத்திரம் செய்துகொண்டிருப்போன் பாவத்தை 21
யடையமாட்டான்.

यदृच्छालाभसंतुष्टो
द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च
कृत्वापि न निबध्यते ॥ २२ ॥

தானாக வந்தெய்தும் லாபத்தில் ஸந்தோஷ முறுவோனாகி, இருமைகளைக் கடந்து, பொறாமை யற்றவனாய், வெற்றியிலும் தோல்வியிலும் ஸம நிலை பெற்றோன் தொழில் செய்தாலும் அதனால் கட்டுப்படுவதில்லை. 22

गतसङ्गस्य मुक्तस्य
ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म
समग्रं प्रविलीयते ॥ २३ ॥

பற்றுத லகன்றோன், விடுதலை கொண்டான், ஞானத்தில் மதி நிலைக்கப் பெற்றோன், வேள்வியெனக் கருதித் தொழில் புரிவான்—அவனுடைய கர்மமெல்லாம் தானே நழுவிப் போய் விடுகிறது. 23

**ब्रह्मार्पणं ब्रह्म हवि-**
**र्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।**
**ब्रह्मैव तेन गन्तव्यं**
**ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥**

பிரமத்துக்கு அர்ப்பணமாக பிரம அவியை பிரமத் தீயில் பிரமத்தால் ஹோமம் பண்ணுவோன், பிரமத்தின் செய்கையில் ஸமாதான மெய்தினோன், அவன் பிரமத்தை அடைவான். 24

**दैवमेवापरे यज्ञं**
**योगिनः पर्युपासते ।**
**ब्रह्माग्नावपरे यज्ञं**
**यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥**

சில யோகிகள் தேவருக்குச் செய்யப்படும் வேள்வியை வழிபடுகிறார்கள். வேறு சிலர் பிரமத் தீயில் வேள்வியையே ஆஹுதி செய்து வேட்கின்றனர். 25

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये
संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य
इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

வேறு சிலர் உட்கரணத்தை யடக்குதலாகிய ஸம்யமம் என்ற தீயில் செவி முதலிய இந்திரியங்களை ஆஹுதி செய்கிறார்கள். வேறு சிலர் இந்திரியங்களாகிய தழல்களில் ஒலி முதலிய விஷயங்களைச் சொரிகிறார்கள். 26

सर्वाणीन्द्रियकर्माणि
प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ
जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

வேறு சிலர் ஞானத்தால் கொளுத்துண்ட தன்னாட்சி யென்ற யோகத் தீயில் எல்லா இந்திரியச் செயல்களையும் உயிர்ச் செயல்களையும் ஹோமம் பண்ணுகிறார்கள், 27

**द्रव्ययज्ञास्तपोयज्ञा**
**योगयज्ञास्तथापरे ।**
**स्वाध्यायज्ञानयज्ञाश्च**
**यतयः संशितव्रताः ॥ २८ ॥**

விரதங்களை நன்கு பாதுகாக்கும் முனிகளில் வேறு சிலர் திரவியத்தால் வேள்வி செய்வோர்; சிலர் தவத்தால் வேட்போர்; சிலர் யோகத்தால் வேட்போர்; சிலர் கல்வியால் வேட்போர்; சிலர் ஞானத்தால் வேட்போர். 28

**अपाने जुह्वति प्राणं**
**प्राणेऽपानं तथाऽपरे ।**
**प्राणापानगती रुद्ध्वा**
**प्राणायामपरायणाः ॥ २९ ॥**

இனி வேறு சிலர் ப்ராணாயாமத்தில் ஈடுபட்டவர்களாய், பிராணன், அபானன் என்ற வாயுக்களின் நடையைக் கட்டுப்படுத்தி அபான வாயுவில் ப்ராண வாயுவையும், ப்ராண வாயுவில் அபானத்தையும் ஆஹுதி பண்ணுகிறார்கள். 29

अपरे नियताहाराः
प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो
यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

வேறு சிலர் உணவை ஒழுங்குப்படுத்தி உயிரை உயிரில் ஆஹூதி செய்கிறார்கள். இவ் வனைவரும் வேள்வி நெறி யுணர்ந்து வேள்வியால் பாவமற்றுப் போயினோர். 30

यज्ञशिष्टामृतभुजो
यान्ति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य
कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

வேள்வியில் மிஞ்சிய அமுதை யுண்போர் என்று முளதாகிய பிரமத்தை எய்துகிறார்கள். வேள்வி செய்யாதோருக் கிவ் வுலக மில்லை. அவர்களுக்குப் பரலோக மேது, குருகுலத்தாரில் சிறந்தோய்? 31

एवं बहुविधा यज्ञा
वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वा-
नेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥

பிரமத்தின் முகத்தில் இங்ஙனம் பலவித வேள்விகள் விரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அவையெல்லாம் தொழிலிலே பிறப்பன வென்றுணர். இவ்வா றுணர்ந்தால் விடுதலை பெறுவாய். 32

श्रेयान्द्रव्यमयाद्यज्ञा-
ज्ज्ञानयज्ञः परन्तप ।
सर्वं कर्माखिलं पार्थ
ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

பரந்தபா, திரவியத்தைக் கொண்டு செய்யப்படும் வேள்வியைக்காட்டிலும் ஞான வேள்வி சிறந்தது. பார்த்தா, கர்மமெல்லாம், முற்றிலும், ஞானத்தில் முடிவு பெறுகிறது. 33

तद्विद्धि प्रणिपातेन
परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं
ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

அதனை வணக்கத்தாலும், சூழ்ந்த கேள்வியாலும், தொண்டு புரிவதாலும் அறிந்துகொள். உண்மை காணும் ஞானிகள் உனக்கு ஞானத்தை யுபதேசிப்பார்கள். 34

यज्ज्ञात्वा न पुनर्मोह-
मेवं यास्यसि पाण्डव ।
येन भूतान्यशेषेण
द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥

அந்த ஞானம் பெறுவதனால், பாண்டவா, நீ அப்பால் இவ்வித மயக்க மெய்தமாட்டாய். இதனால் நீ எல்லா உயிர்களையும், மிச்சமின்றி நின்னுள்ளே காண்பாய். அப்பால் அவற்றை என்னுள்ளே காண்பாய். 35

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं सन्तरिष्यसि ॥ ३६ ॥

பாவிகளெல்லாரைக் காட்டிலும் நீ அதிகப் பாவியாக இருந்தாலும், அப் பாவத்தை யெல்லாம் ஞானத் தோணியால் கடந்து செல்வாய்.

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥३७

நன்கு கொளுத்துண்ட தீ விறகுகளைச் சாம்பராக்கி விடுதல் போலவே, அர்ஜுனா, ஞானத் தீ எல்லா வினைகளையும் சாம்பராக்கிவிடும். 37

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥३८

ஞானத்தைப்போல் தூய்மை தரும் பொருள் இவ்வுலகத்தில் வேறெதுவுமில்லை. யோகத்தில் நல்ல ஸித்தி யடைந்தவன் தானாகவே தக்க பருவத்தில் அதைத் தனக்குள் கிடைக்கப் பெறுகிறான். 38

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥

பிரம்த்தையைப் பரமாகக்கொண்டு, இந்திரியங்களைக் கட்டுப்படுத்தியவனாய், சிரத்தை யுடையோன் ஞானத்தை யடைகிறான். ஞானத்தை யடைந்தபின் விரைவிலே பரசாந்தி பெறுகிறான். 39

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥

அறிவும் சிரத்தையுமின்றி ஐயத்தை இயல்பாகக் கொண்டோன் அழிந்துபோகிறான். ஐயமுடையோனுக்கு இவ்வுலகு மில்லை; மேலுலகு மில்லை; இன்பமு மில்லை. 40

योगसंन्यस्तकर्माणं ज्ञानसञ्छिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥४१॥

யோகத்தால் செய்கைகளைத் துறந்து, ஞானத்தால் ஐயத்தை அறுத்துத் தன்னைத்தான் ஆள்வோனை, தனஞ்சயா! கர்மங்கள் கட்டுப் படுத்தமாட்டா. 41

**तस्मादज्ञानसम्भूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।**
**छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥४२॥**

அஞ்ஞானத்தால் தோன்றி நெஞ்சில் நிலை கொண்டிருக்கும் இந்த ஐயத்தை உன் ஞான வாளால் அறுத்து யோக நிலை கொள். பாரத, எழுந்து நில். 42

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां**
**योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे**
**ज्ञानविभागयोगो नाम**
**चतुर्थोऽध्यायः ।**

இங்ஙனம் உபநிஷத்தும், பிரம வித்தையும்
யோகசாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையுமாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "ஞானயோகம்" என்ற
நான்காம் அத்யாயம் முற்றிற்று.

# पञ्चमोऽध्यायः

## ஐந்தாம் அத்யாயம்.

### ஸம்ந்யாஸயோகம்.

**अर्जुन उवाच—**

**संन्यासं कर्मणां कृष्ण**
**पुनर्योगं च शंससि ।**
**यच्छ्रेय एतयोरेकं**
**तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥**

அர்ஜுனன் சொல்லுகிறான்—

கண்ணா, செய்கைகளின் துறவைப் புகழ்ந்து பேசுகிறாய்; பின்னர் அவற்றுடன் கலப்பதைப் புகழ்கிறாய். இவ்விரண்டில் எது வொன்று சிறந்த தென்பதை நன்கு நிச்சயப் படுத்தி என்னிடஞ் சொல்.

श्रीभगवानुवाच—

संन्यासः कर्मयोगश्च
निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्
कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

துறவு, கர்மயோகம், இவ்விரண்டும் உயர்ந்த நலத்தைத் தருவன. இவற்றுள் கர்மத் துறவைக் காட்டிலும் கர்மயோகம் மேம்பட்டது. 2

ज्ञेयः स नित्यसंन्यासी
यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो
सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

பகைத்தலும் விரும்புதலு மில்லாதவனை நித்ய ஸந்யாஸி யென்றுரைக்கக் கடவாய். பெருந் தோளுடையாய், இருமை நீங்கி அவன் எளிதில் பந்தத்தி னின்று விடுபடுகிறான். 3

साङ्ख्ययोगौ पृथग्बालाः
प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यक्
उभयोर्विन्दते फलम् ॥ ४ ॥

ஸாங்க்யத்தையும் யோகத்தையும் வெவ்வேறென்று சொல்வோர் குழந்தைகள்; பண்டிதர் அங்ஙனம் கூறார். இவற்றுள் யாதேனுமொன்றில் நன்கு நிலை பெற்றோன் இரண்டின் பயனையும் எய்துகிறான். 4

यत्साङ्ख्यैः प्राप्यते स्थानं
तद्योगैरपि गम्यते ।
एकं साङ्ख्यं च योगं च
यः पश्यति स पश्यति ॥ ५ ॥

ஸாங்க்யர் பெறும் நிலையையே யோகிகளும் பெறுகிறார்கள். ஸாங்க்யத்தையும் யோகத்தையும் எவன் ஒன்றாகக் காண்பானோ, அவனே காட்சியுடையான். 5

संन्यासस्तु महाबाहो
दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म
न चिरेणाधिगच्छति ॥ ६ ॥

பெருந் தோளாய், யோக மில்லாதவன் ஸந்யாஸம் பெறுதல் கஷ்டம். யோகத்தில் பொருந்திய முனி விரைவில் பிரமத்தை அடைகிறான். 6

योगयुक्तो विशुद्धात्मा
विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा
कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

யோகத்திலே மருவித் தூய்மை யுற்றோன், தன்னைத் தான் வென்றோன், இந்திரியங்களின் மீது வெற்றி கொண்டோன், எல்லா உயிர்களுக்குந் தானே யானவன்—அவன் தொழில் செய்து கொண்டிருப்பினும் அதில் ஒட்டுவதில்லை. 7

नैव किंचित्करोमीति
युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्र-
न्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥ ८ ॥

உண்மை யறிந்த யோகி "நான் எதனையுஞ் செய்வதில்லை" என் றெண்ணக் கடவான். காண்கினும், கேட்கினும், தீண்டினும், மோப்பினும், உண்பினும், நடப்பினும், உயிர்ப்பினும், உறங்கினும், 8

प्रलपन्विसृजन्गृह्ण-
न्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु
वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

புலம்பினும், விடினும், வாங்கினும், இமைகளைத் திறப்பினும் மூடினும், எதிலும் "இந்திரியங்கள் தம்முடைய விஷயங்களில் சலிக்கின்றன" என்று கருதி யிருக்கக் கடவான். 9.

ब्रह्मण्याधाय कर्माणि
सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन
पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

செய்கைகளை யெல்லாம் பிரம்மத்தில் சார்த்தி விட்டுப் பற்றுதலை நீக்கி எவன் தொழில் செய்கிருனே, அவன், நீரில் தாமரை யிலைபோல், பாவத்தால் தீண்டல் பெறுவதில்லை. 10

कायेन मनसा बुद्ध्या
केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति
सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥ ११ ॥

யோகிகள் பற்றுதலைக் களைந்து, ஆத்ம சுத்தியின் பொருட்டாக உடம்பாலும், மனத்தாலும், புத்தியாலும், அன்றி வெறுமே இந்திரியங்களாலும், தொழில் செய்வார். 11

4

युक्तः कर्मफलं त्यक्त्वा
शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण
फले सक्तो निबध्यते ॥ १२ ॥

யோகத்தில் பொருந்தியவன் கர்மப் பயனைத் துறந்து நிஷ்டைக் குரிய சாந்தியை அடைகிறான். யோகத்தில் இணங்காதோன் விருப்பத்துக்கு வசமாய்ப் பயனிலே பற்றுதல் கொண்டு தளைப்படுகிறான். 12

सर्वकर्माणि मनसा
संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही
नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

தன்னை வசங்கொண்ட ஆத்மா, எல்லாக் கர்மங்களையும் மனதால் துறந்து, எதனையும் செய்வது மின்றிச் செய்விப்பது மின்றி, ஒன்பது வாயில் கொண்ட உடற் கோட்டையில் இன்புற்றிருக்கிறான். 13

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

செய்கைத் தலைமை, செய்கை, செய்கைப் பயன் பெறுதல்—இவற்றுளொன்றையும் கடவுள் மனிதனுக்குத் தரவில்லை. இயற்கையே இயல் பெறுகிறது. 14

नादत्ते कस्यचित् पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५ ॥

எவனையும் பாவி அல்லது நற் செய்கையுடையோனென்று கடவுள் ஏற்பதில்லை. அஞ்ஞானத்தால் ஞானம் சூழப்பட்டிருக்கிறது. அதனால் ஜந்துக்கள் மயக்க மெய்துகின்றன. 15

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

அந்த அஞ்ஞானத்தை ஆத்ம ஞானத்தால் அழித்தவர்களுடைய ஞானம் ஸூரியனைப் போன்றதாய்ப் பரம்பொருளை ஒளியுறக் காட்டுகிறது. 16

**तद्बुद्धयस्तदात्मान-**
**स्तन्निष्ठास्तत्परायणाः ।**
**गच्छन्त्यपुनरावृत्तिं**
**ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥**

பிரம்மத்தில் புத்தியை நாட்டி, அதுவே தா
மாய், அதில் நிஷ்டை யெய்தி, அதில் ஈடுபட்
டோர், தம்முடைய பாவங்களெல்லாம் நன்கு
கழுவப் பெற்றோராய், மீளாப் பதமடைகிறார்
கள். 17

**विद्याविनयसम्पन्ने**
**ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च**
**पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥**

கல்வியும் விநயமும் நன்கு கற்ற பிராமண
னிடத்திலும், பசுவினிடத்தும், யானையினிடத்
தும், நாயினிடத்தும், நாயைத் தின்னும் புலைய
னிடத்தும் பண்டிதர் ஸமப் பார்வை யுடை
யோர். 18

इहैव तैर्जितः सर्गो
येषां साम्ये स्थितं मनः ।
निर्दोषं हि समं ब्रह्म
तस्माद् ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥

மனம் ஸம நிலையில் நிற்கப்பெற்றோர் இவ்வுலகத்திலேயே இயற்கையை வென்றோராவர். பிரம்மம் மாசற்றது. ஸம நிலை யுற்றது. ஆதலால் அவர்கள் பிரம்மத்தில் நிலை பெறுகிறார்கள்.

न प्रहृष्येत् प्रियं प्राप्य
नोद्विजेत् प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसम्मूढो
ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥ २० ॥

விரும்பிய பொருளைப் பெறும்போது களி கொள்ளான்; பிரியமற்றதைப் பெறும்போது துயர்ப்படமாட்டான்; பிரம்மஞானி, ஸ்திர புத்தி யுடையோனாய், மயக்கம் நீங்கி, பிரம்மத்தில் நிலை பெறுகிறான்.

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत् सुखम् ।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥**

புறத் தீண்டுதல்களில் பற்றுதல் கொள்ளாமல் தனக்குள்ளே இன்பத்தைக் காண்போன் பிரம்ம யோகத்தில் பொருந்தி அழியாத இன்பத்தை எய்துகிறான். 21

**ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।**
**आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२ ॥**

புறத் தீண்டுதல்களில் தோன்றும் இன்பங்கள் துன்பத்துக்குக் காரணங்களாம். அவை தொடக்கமும் இறுதியு முடையன. குந்தி மகனே, அறிவுடையோன் அவற்றில் களியுறுவதில்லை. 22

**शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् ।**
**कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥२३**

சரீரம் நீங்குமுன்னர் இவ்வுலகத்திலேயே விருப்பத்தாலும் சினத்தாலும் விளையும் வேகத்தை எவன் பொறுக்க வல்லானோ அந்த மனிதன் யோகி, அவன் இன்பமுடையோன். 23

**योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः।**
**स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥२४॥**

தனக்குள்ளே இன்பமுடையவனாய், உள்ளே மகிழ்ச்சி காண்பவனாய், உள்ளே ஒளி பெற்றவனாகிய யோகி, தானே ப்ரம்மமாய், ப்ரம்மநிர்வாண மடைகிறான். 24

**लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः।**
**छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः॥ २५॥**

* இருமைகளை வெட்டிவிட்டுத் தம்மைத் தாம் கட்டுப்படுத்தி, எல்லா உயிர்களுக்கும் இனியது செய்வதில் மகிழ்ச்சி யெய்தும் ரிஷிகள் பாவங்களொழிந்து ப்ரம்ம நிர்வாணம் அடைகிறார்கள்.

---

* இருமைகள்: நன்மை, தீமை; குளிர், சூடு; இன்பம், துன்பம்—என எல்லாப் பொருள்களையும் பற்றி நிற்கும் இரட்டை நிலைகள்.

**कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।**
**अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥**

விருப்பமும், சினமுந் தவிர்ந்து சித்தத்தைக் கட்டுப்படுத்திய ஆத்மஞானிகளாகிய முனிகளுக்கு ப்ரம்மநிர்வாணம் அருகிலுள்ளது. 26

**स्पर्शान् कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।**
**प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥**

புறத் தீண்டுதல்களை அகற்றிப் புருவங்களுக்கிடையே விழிகளை நிறுத்தி மூக்கினுள்ளே இயங்கும் பிராண வாயுவையும் அபான வாயுவையும் ஸமமாகச் செய்துகொண்டு 27

**यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।**
**विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥**

புலன்களை, மனத்தை, மதியையும் கட்டி
வீடுதலை யிலக் கெனக் கொண்டு
விருப்பமும் அச்சமும் சினமுந் தவிர்த்தான்,
முக்தனே யாவான் முனி, 28

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥

'வேள்வியுந் தவமும் † மிசைவோன் யானே;
உலகுகட் கெல்லாம் ஒருபே ரரசன்;
எல்லா உயிர்கட்கு நண்பன் யான்' என்
றறிவான் அமைதி யறிவான். 29

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
संन्यासयोगो नाम
पञ्चमोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும்,
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "ஸந்யாஸ யோகம்" என்ற
ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

† மிசைவது-உண்பது.

# षष्ठोऽध्यायः

## ஆரும் அத்யாயம்.

### அத்யாத்மயோகம்.

**श्रीभगवानुवाच—**

**अनाश्रितः कर्मफलं**
**कार्यं कर्म करोति यः ।**
**स संन्यासी च योगी च**
**न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥**

பகவான் சொல்லுகிறன் :—

*செய்கையின் பயனில் சார்பின்றிச் செய்யத் தக்கது செய்வோன் துறவி; அவனே யோகி. தீ வளர்க்காதவனும் கிரியை செய்யாதவனும் அவர் ஆகார்.*

**यं संन्यासमिति प्राहु-**
**र्योगं तं विद्धि पाण्डव ।**
**न ह्यसंन्यस्तसङ्कल्पो**
**योगी भवति कश्चन ॥ २ ॥**

பாண்டவா, எதனை ஸந்யாஸமென்கிறார்களோ, அதுவே யோகமென்றறி. தன் கோட்பாடுகளைத் துறக்காத எவனும் யோகியாக மாட்டான். 2

**आरुरुक्षोर्मुनेर्योगं**
**कर्म कारणमुच्यते ।**
**योगारूढस्य तस्यैव**
**शमः कारणमुच्यते ॥ ३ ॥**

யோக நிலையில் ஏற விரும்பும் யோகிக்குத் தொழிலே கருவியாகக் கூறப்படுகிறது. அந்நிலையில் ஏறியபின் அவனுக்கு சாந்தம் கருவியாகிறது. 3

**यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।**
**सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥**

ஒருவன் எல்லாக் கோட்பாடுகளையுந் துறந்து விட்டுப் புலன்களிலேனும் செயல்களிலேனும் பற்றுதலின்றி யிருப்பானாயின், அப்போதவன் 'யோக நிலையில் ஏறியவன்' என்று சொல்லப்படுகிறான். 4

**उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।**
**आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥**

தன்னைத்தான் உயர்த்திக்கொள்க; தன்னைத் தன்னால் இழிவுறுத்த வேண்டா; தனக்குத் தானே நண்பன்; தனக்குத் தானே பகைவன். 5

**बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।**
**अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥**

தன்னைத்தான் வென்றவனே தனக்குத் தான் நண்பன்; தன்னைத்தான் வெல்லாதான் தனக்குத் தான் பகைவன் போற் கேடு சூழ்கிறான். 6

जितात्मनः प्रशान्तस्य
परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु
तथा मानापमानयोः ॥ ७ ॥

தன்னை வென்று ஆறுத லெய்தியவனிடத்தே
சீதோஷ்ணங்களிலும், ஸுக துக்கங்களிலும்,
மானாபமானங்களிலும் ஸம நிலைப்பட்ட பர
மாத்மா விளங்குகிறது. 7

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८ ॥

* ஞானத்திலும் விஞ்ஞானத்திலும் திருப்தி
கொண்டவனாய், மலை முடியில் நிற்பான்
போன்று, புலன்களை வென்று, ஓட்டையும் கல்
லையும் பொன்னையும் ஒன்று போலே காணும்
யோகியே யோகநிலை யுற்றா னெனப்படுவான். 8

---

* ஞான மென்பது கடவுளியலைப் பற்றிய அறிவு.
விஞ்ஞான மென்பது உலக வியலைப் பற்றியது.

सुहृन्मित्रार्युदासीन-
मध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु
समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

அன்பர், நட்டார், பகைவர், எதிலர், நடுவர், எதிரிகள், சுற்றத்தார், நல்லோர், தீயோர், எல்லோரிடத்தும் ஸமபுத்தி யுடையோன் மேலோனவான். 9

योगी युञ्जीत सतत-
मात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा
निराशीरपरिग्रहः ॥ १० ॥

மறைவிடத்தில் இருந்துகொண்டு, தனியனாய், உள்ளத்தைக் கட்டி, ஆசையைத் துறந்து, ஏற்பது நீக்கி எப்போதும் ஆத்மாவில் யோக முறக் கடவான். 10

**शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।**
**नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥११**

சுத்தமான இடத்தில், அதிக உயரமில்லாமலும், அதிகத் தாழ்வில்லாமலும், துணி, மான் தோல், தர்ப்பை இவற்றின்மீது தனக்கோருறுதியான ஆஸனம் சமைத்துக்கொண்டு, 11

**तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।**
**उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥**

அங்கு மனதை ஒருமுகமாக்கி, உள்ளத்தையும் புலச் செயல்களையும் நன்கு கட்டுப்படுத்தி, ஆஸனத்தமர்ந்து ஆத்மா நன்கு தூய்மையடையும்படி யோகத்திலே பொருந்தக் கடவான். 12

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।**
**संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥१३**

உடம்பையும், தலையையும், கழுத்தையும் ஸமமாக அசைவின்றி வைத்துக்கொண்டு, உறுதி சான்றவனாய், மூக்கு நுனியைப் பார்த்துக் கொண்டு, திசைகளை நோக்காமல், 13

प्रशान्तात्मा विगतभी-
र्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो
युक्त आसीत मत्परः ॥ १४ ॥

நன்கு சாந்த மெய்தியவனும், அச்சத்தைப் போக்கி, பிரம்மசாரி விரதத்தில் நிலைகொண்டு, மனதை வசப்படுத்தி, என்னிடத்தே சித்தத்தை இசைத்து எனக்கு ஈடுபட்டு யோகத்திலிருக்கக் கடவான். 14

युञ्जन्नेवं सदात्मानं
योगी नियतमानसः ।
शान्ति निर्वाणपरमां
मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

இங்ஙனம் எப்போதும் மனதைக் கட்டுப் படுத்தி, ஆத்மாவில் யோகமுற்றிருக்கும் யோகி என்பால் நிலை பெற்றதாகிய மிகச் சிறந்த விடுதலையிலுள்ள ஆறுதலை யறிவான். 15

नात्यश्नतस्तु योगोऽस्ति
न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य
जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

மிகைபட உண்போனுக்கு யோகமில்லை; உணவற்றோனுக்கும் ஏகாந்த நிலை எய்தாது. மிகுதியாக உறங்குவோனுக்குமில்லை; அர்ஜுனா, மிகுதியாக விழிப்போனுக்கும் அஃதில்லை. 16

युक्ताहारविहारस्य
युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य
योगो भवति दुःखहा ॥ १७ ॥

ஒழுங்குக்கு உட்பட்ட உணவும், விளையாட்டும் உடையோனாய், வினைகளில் ஒழுங்குக் குட்பட்ட சேஷ்டைகளுடையவனாய், உறக்கத்திலும் விழிப்பிலும் ஒழுங்குக் குட்பட்டானாயின், அவனுடைய யோகம் துயரை அழிக்கிறது. 17

**यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।**
**निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥**

உள்ளம் கட்டுக் கடங்கித் தனதுள்ளேயே நிலை பெற, ஒருவன் எந்த விருப்பத்திலும் வீழ்ச்சி யற்றானாயின், யோகமுற்றா னெனப்படுவான். 18

**यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।**
**योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९.**

சித்தத்தைக் கட்டி ஆத்ம யோகத்தில் கலந்து நிற்கும் யோகிக்கு காற்றில்லாத இடத்தில் அசைவின்றி நிற்கும் விளக்கை முன்னோர் உவமையாகக் காட்டினர். 19

**यत्रोपरमते चित्तं**
**निरुद्धं योगसेवया ।**
**यत्र चैवात्मनात्मानं**
**पश्यन्नात्मनि तुष्यति ॥ २० ॥**

எங்கு சித்தம் யோக ஒழுக்கத்தில் பிடிப்புற்று ஆறுதலெய்துமோ, எங்கு ஆத்மாவினால் ஆத்மாவை யறிந்து ஒருவன் ஆத்மாவில் மகிழ்ச்சி யடைகிறானோ, 20

**सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।**
**वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥२१॥**

புத்தியால் தீண்டத்தக்கதும் புலன்களைக் கடந்து நிற்பதுமாகிய பேரின்பத்தை எங்கு காண்பானோ, எங்கு நிலை பெறுவதால் இவன் உண்மையினின்றும் வழுவுவதில்லையோ, 21

**यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।**
**यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥**

எதனை யெய்தியபின் அதைக்காட்டிலும் பெரிய லாபம் வேறிருப்பதாகக் கருதமாட்டானோ, எங்கு நிலை பெறுவதாய் பெரிய துக்கத்தாலும் சலிப் பெய்தமாட்டானோ, 22

**तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।**
**स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥**

அந் நிலையே துன்பத்துடன் கலத்தலை விடுதலாகிய யோகநிலை யென்று உணர். உள்ளத்தில் ஏக்கமின்றி உறுதியுடன் அந்த யோகத்தை ஒருவன் பற்றி நிற்கக் கடவான். 23

सङ्कल्पप्रभवान् कामां-
स्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं
विनियम्य समन्ततः ॥ २४ ॥

* ஸங்கல்பத்தினின்றும் எழும் எல்லா விருப்பங்களையும் மிச்சமறத் துறந்துவிட்டு, எல்லாப் பக்கங்களிலும் மனதால் இந்திரியக் குழாத்தைக் கட்டுப்படுத்தி, 24

शनैःशनैरुपरमेद्
बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा
न किञ्चिदपि चिन्तयेत् ॥ २५ ॥

துணிந்த மதியுடன் மனதை ஆத்மாவில் நிறுத்தி, மெல்ல மெல்ல ஆறுதல் பெறக் கடவான்; எதற்கும் கவலை யுறாதிருக்கக் கடவான். 25

---

* ஸங்கல்பம் - மனத்தீர்மானம்.

**यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।**
**ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥**

எங்கெங்கே மனம் சஞ்சலமாய் உறுதியின்றி உழலுகிறதோ, அங்கங்கே அதைக் கட்டுப் படுத்தி ஆத்மாவுக்கு வசமாக்கிக்கொள்க. 26

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।**
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥**

மனம் சாந்தமாய், ரஜோ குணம் ஆறி, மாசு நீங்கி ப்ரம்மமே யாகிய இந்த யோகிக்கு மிகச் சிறந்த இன்பம் கிடைக்கிறது. 27

**युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।**
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥**

குற்றங்களைப் போக்கி இங்ஙனம் எப்போதும் ஆத்மாவில் கலப்புற்றிருப்பானாயின், அந்த யோகி ப்ரம்மத்தைத் தொடுவதாகிய மிகவுயர்ந்த இன்பத்தை எளிதில் துய்க்கிறான். 28

**सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।**
**ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥**

*யோகத்தில் கலந்தவன் எங்கும் ஸமப்பார்வை யுடையவனாய், எல்லா உயிர்களிடத்தும் தானி ருப்பதையும் தன்னுள் எல்லா உயிர்களு மிருப் பதையும் காணுகிறான்.* 29

**यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।**
**तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३०**

*எவன் எங்கும் என்னைக் காண்கிறானோ, எல் லாப் பொருள்களையும் என்னிடத்தே காண்கிறா னோ, அவனுக்கு நான் அழியமாட்டேன்; எனக் கவன் அழியமாட்டான்.* 30

**सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।**
**सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१**

*ஒருமையில் நிலை கொண்டவனாய் எல்லா உயிர்களிடத்திலுள்ள என்னைத் தொழுவோன், யாங்கனும் சென்றபோதிலும், அந்த யோகி என்னுள்ளேயே இயலுகிறான்.* 31

आत्मौपम्येन सर्वत्र
समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं
स योगी परमो मतः ॥ ३२ ॥

இன்பமாயினும், துன்பமாயினும்—எதிலும் ஆத்மஸமத்வம் பற்றி ஸமப் பார்வை செலுத்துவானாயின், அவன் பரமயோகியாகக் கருதப்படுவான். 32

अर्जुन उवाच—

योऽयं योगस्त्वया प्रोक्तः
साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि
चञ्चलत्वात् स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

அர்ஜுனன் சொல்லுகிறன்—

மதுஸூதனா, இங்ஙனம் நீ ஸமத்வத்தால் ஏற்படுவதாகச் சொல்லிய யோகம் ஸ்திரமான நிலையுடையதாக எனக்குத் தோன்றவில்லை, எனது சஞ்சலத்தன்மையால். 33

**चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद् दृढम् ।**
**तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥३४॥**

கண்ணா, மனம் சஞ்சலமுடையது; கலக்கு மியல்பினது, வலிது; உரமுடையது. அதைக் கட்டுப்படுத்துதல் காற்றைக் கட்டுவதுபோல் மிகவும் கஷ்டமான செய்கை யென்று நான் மதிக்கிறேன். 34

**श्रीभगवानुवाच—**

**असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।**
**अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥३५॥**

பகவான் சொல்லுகிறான்—

பெருந்தோளாய், மனம் கட்டுதற் கரிதுதான். சலன முடையதுதான்; ஐயமில்லை. ஆனால், குந்தியின் மகனே, அதை பழக்கத்தாலும், விருப்பின்மையாலும் கட்டிவிடலாம். 35

**असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।**
**वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥**

தன்னைக் கட்டாதவன் யோக மெய்துதல் அரிதென்று நான் கருதுகிறேன். தன்னைக் கட்டியவன் முயற்சியாலும் உபாயத்தாலும்
அதனை எய்த வல்லான். 36

**अर्जुन उवाच—**

**अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।**
**अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥**

அர்ஜுனன் சொல்லுகிறான்:—

நம்பிக்கை யுடையோனெனினும், தன்னைக் கட்டாமையால் யோகத்தினின்றும் மனம் வழுவியவன் யோகத்தில் தோற்றுப்போய், அப்பால்
என்ன கதி யடைகிறான், கண்ணா? 37

कच्चिन्नोभयविभ्रष्ट-
श्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो
विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

ஒரு வேளை அவன் இரண்டுங் கெட்டவனாய், உடைந்த மேகம்போல் அழிகிறானோ? பெருந் தோளாய், உறுதி யற்றவனாய், ப்ரம்ம நெறியிலே குழப்பமெய்திய மூடன் யாதாகிறான்? 38

एतन्मे संशयं कृष्ण
छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य
छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

கண்ணா; எனக்குள்ள இந்த ஐயத்தை நீ அறுத்துவிடுக. நின்னை யன்றி இந்த ஐயத்தை யறுப்போர் வேறெவருமிலர். 39

श्रीभगवानुवाच—

पार्थ नैवेह नामुत्र
विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत् कश्चिद्-
दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

பார்த்தா, அவனுக்கு இவ்வுலகத்திலும், மேலுலகத்திலும் அழிவில்லை; மகனே, நன்மை செய்வோன் எவனும் கெட்டகதி யடையமாட்டான்.

प्राप्य पुण्यकृतांल्लोका-
नुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे
योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

யோகத்தில் தவறியவன், புண்ணியம் செய்வோரின் உலகங்களை யெய்தி, அங்கு கணக்கில்லாத வருஷங்கள் வாழ்ந்து, தூய்மை யுடைய செல்வர்களின் வீட்டில் பிறக்கிறான். 41

**अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥**

அல்லது, புத்திமான்களாகிய யோகிகளின் குலத்திலேயே பிறக்கிறான். இவ்வுலகில் இது போன்ற பிறவி யெய்துதல் மிகவும் அரிது. 42

**तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३ ॥**

அங்கே அவன் பூர்வ சரீரத்துக் குரிய புத்தியைப் பெறுகிறான். குருநந்தனா, அப்பால் அவன் மறுபடியும் வெற்றிக்கு முயற்சி செய்கிறான். 43

**पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥**

பண்டைப் பழக்கத்தால் அவன் தன் வசமின்றியும் இழுக்கப்படுகிறான். யோகத்தை அறிய வேண்டுமென்ற விருப்பத்தாலேயே ஒருவன் ஒலி யுலகத்தைக் கடந்து செல்லுகிறான். 44

प्रयत्नाद्यतमानस्तु
योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्ध-
स्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

பாவம் நீங்கியவனாய், ஊன்றி முயல்வானே யாயின், யோகி பல பிறவிகளின் வெற்றிப்பயனாகிய பரகதியை அப்போதடைகிறான். 45

तपस्विभ्योऽधिको योगी
ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी
तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

தவஞ் செய்வோரைக் காட்டிலும் யோகி சிறந்தோன்; ஞானிகளிலும் அவன் சிறந்தோனாகக் கருதப்படுகிறான்; கர்மிகளிலும் அவன் சிறந்தோன்; ஆதலால், அர்ஜுனா, யோகியாகுக. 46

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः ॥

மற்றுள்ள யோகிகளெல்லாரிலும், எவனொருவன் அந்தராத்மாவில் என்னைப் புகுத்தி என்னை நம்பிக்கையுடன் போற்றுகிறானோ, அவன் மிக மேலான யோகி யென்பது என்னுடைய கொள்கை. 47

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
अध्यात्मयोगो नाम
षष्ठोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "அத்யாத்மயோகம்" என்ற ஆறும் அத்யாயம் முற்றிற்று.

---

# सप्तमोऽध्यायः

## ஏழாம் அத்யாயம்.

### ஞானயோகம்.

श्रीभगवानुवाच—

मय्यासक्तमनाः पार्थ
योगं युञ्जन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां
यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறன் :—

பார்த்தா, என்பால் இசைந்த மனத்தினனாய், என்னைச் சார்ந்து, யோகத்திலே அமர்ந்தானாய், என்னை முழுதும் உணருமாறு சொல்லக் கேளாய்.

**ज्ञानं तेऽहं सविज्ञान-**
**मिदं वक्ष्याम्यशेषतः ।**
**यज्ज्ञात्वा नेह भूयोऽन्य-**
**ज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥**

ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் ஸம்பூர்ணமாக உனக்குச் சொல்லுகிறேன். இதை அறிந்தால் பிறகு நீ அறிய வேண்டியது மிச்சமொன்றுமில்லை. 2

**मनुष्याणां सहस्रेषु**
**कश्चिद्यतति सिद्धये ।**
**यततामपि सिद्धानां**
**कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥**

பல்லாயிர மனிதரில் ஒருவன் ஸித்தி பெற முயல்கிறான். முயற்சியுடைய ஸித்தர் பலரில் ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான். 3

**भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।**
**अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥**

மண், நீர், தீ, காற்று, வான், மனம், மதி, * அஹங்காரம், இவ்வெட்டு வகையாக என் இயற்கை பிரிந்து தோன்றுகிறது. 4

**अपरेयमितस्त्वन्यां प्रकृति विद्धि मे पराम् ।**
**जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥**

இது என் கீழியற்கை. இதினின்றும் வேறுபட்டதாகிய என் மேலியற்கையை அறி; அதுவே உயிராவது; பெருந்தோளாய், அதனால் இவ்வுலகு தரிக்கப்படுகிறது. 5

**एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।**
**अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥**

எல்லா உயிர்களுக்கும் அது காரணமென்றுணர். அதனால் நான் உலக முழுமைக்கும் ஆக்கமும் அழிவு மாவேன்.

---

* அஹங்காரம் எல்லாச் சேதன உயிர்களுக்குமுள்ள "நான்" என்ற கொள்கை.

**मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय ।**
**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥**

தனஞ்ஜயா, என்னைக்காட்டிலும் உயர்ந்த பொருள் வேறெதுவுமில்லை. நூலில் மணிகளைப்போல் இவ்வையக மெல்லாம் என்மீது கோக்கப்பட்டது. 7

**रसोऽहमप्सु कौन्तेय प्रभाऽस्मि शशिसूर्ययोः ।**
**प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥**

நான் நீரில் சுவை; குந்திமகனே, நான் ஞாயிற்றிலும் திங்களிலும் ஒளி; எல்லா வேதங்களிலும் நான் பிரணவம். வானில் ஒலி நான்; ஆண் மக்களிடத்து நான் ஆண்மை. 8

**पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।**
**जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥**

மண்ணில் தூய நாற்றமும், தீயில் சுடரும், யான். எல்லா உயிர்களிலும் உயிர்ப்பு நான்; தவஞ் செய்வோரின் தவம் யான். 9

**बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥१०॥**

எல்லா உயிர்களுக்கும் நான் ஸநாதனமாகிய விதை யென்றுணர். பார்த்தா, புத்தியுடையோரின் புத்தி நான். ஒளியுடையோரின் ஒளி நான். 10

**बलं बलवतामस्मि कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११॥**

வல்லோரிடத்தே விருப்பமும் விழைவுந் தீர்ந்த வலிமை நான். பாரதரேறே, உயிர்களிடத்து நான் கடமை தவறாத விருப்ப மாவேன்.

**ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि नत्वहं तेषु ते मयि ॥ १२॥**

ஸத்வ ரஜஸ் தமோ குணங்களைச் சார்ந்த மனநிலைகளெல்லாம் என்னிடத்தே பிறந்தன. அவை என்னுள் இருக்கின்றன. நான் அவற்றுள் இல்லை. 12

**त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।**
**मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥**

இந்த மூன்று குணங்களாலாகிய எண்ணங்களால் இவ்வுலகமெல்லாம் மயங்கிப்போய் இவற்றினும் மேலாய் அழியாத இயல்புகொண்ட என்னை உணராதிருக்கிறது. 13

**दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।**
**मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥**

இந்த குண மயமாகிய எனது தேவமாயை கடத்தற்கரிது. என்னையே யாவர் சரணடைவரோ, அவர்கள் இந்த மாயையைக் கடக்கின்றார்கள். 14

**न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।**
**माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥**

தீமை செய்யும் மூடர், மனிதரில் கடைப்பட்டோர், மாயையால் ஞான மழிந்தோர், அசுரத் தன்மையைப் பற்றி நிற்போர்,—(இனையோர்) என்னைச் சரண் புகார். 15

चतुर्विधा भजन्ते मां
जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी
ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥

நற் செய்கையுடைய மக்களில் நான்கு வகையார் என்னை வழிபடுகின்றனர், பாரதரேறே, துன்புற்றோர், அறிவை விரும்புவோர், பயனை வேண்டுவோர், ஞானிகள் என. 16

तेषां ज्ञानी नित्ययुक्त
एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थ-
महं स च मम प्रियः ॥ १७ ॥

அவர்களில் நித்ய யோகம் பூண்டு ஒரே பக்தி செலுத்தும் ஞானி சிறந்தவன். ஞானிக்கு நான் மிகவும் இனியவன்; அவன் எனக்கு மிகவும் இனியான். 17

**उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।**
**आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम्॥**

மேற்சொல்லிய யாவரும் நல்லாரே. எனினும், ஞானியை நான் யானாகவே கொண்டுளேன். அவன் யோகத்தில் இசைந்து உத்தம கதியாகிய என்னைக் கடைப் பிடித்து நிற்கிறான். 18

**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।**
**वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥१९॥**

பல பிறவிகளின் இறுதியில் ஞானவான் "எல்லாம் வாஸுதேவனே" என்று கருதி என்னை அடைக்கலமாகப் பற்றுகிறான். அவ்வித மஹாத்மா கிடைத்தற் கரியவன். 19

**कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।**
**तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥**

வெவ்வேறு விருப்பங்களால் கவரப்பட்ட அறிவினையுடையோர் தத் தம் இயற்கையால் கட்டுண்டு, வெவ்வேறு நியமங்களில் நிற்பாராய் அன்னிய தேவதைகளை வழிபடுகின்றனர். 20

**यो यो यां यां तनुं भक्तः**
**श्रद्धयार्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां**
**तामेव विदधाम्यहम् ॥ २१ ॥**

எந்த எந்த பக்தன், நம்பிக்கையுடன், எந்த எந்த வடிவத்தை அர்ச்சிக்க விரும்புகிறானோ, அவனவனுடைய அசையாத நம்பிக்கைக்குத் தக்க வடிவத்தை நான் மேற்கொள்ளுகிறேன். 21

**स तया श्रद्धया युक्त-**
**स्तस्याराधनमीहते ।**
**लभते च ततः कामा-**
**न्मयैव विहितान्हितान् ॥ २२ ॥**

அவன் அந்த நம்பிக்கையுடன் கலந்து அவ் வடிவத்தை ஆராதிக்க வேண்டுகிறான். அதினின்றும் தான் விரும்பியனவற்றை எய்துகிறான்; எனினும், அவற்றை வகுத்துக் கொடுப்போன் யானே. 22

**अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।**
**देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥**

எனினும், அற்பமதி யுடைய அன்னோர் எய்தும் பயன் இறுதி யுடைத்தாம். தேவர்களைத் தொழுவோர் தேவர்களை எய்துகின்றனர். என் அடியார் என்னையே எய்துகிறார்கள். 23

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।**
**परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥**

மறைவும் வெளிப்பாடும் உடையோனாக என்னை மதியற்றோர் கருதுகின்றனர். என் அழிவற்ற உத்தமமாகிய பர நிலையை அன்னோர் அறிகிலர். 24

**नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।**
**मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥**

எல்லாவற்றுக்கும் ஒளியாகிய என்னை யோக மாயை சூழ்வதில்லை. பிறப்பும், கேடுமற்ற என்னை மூட வுலகம் அறியவில்லை, 25

वेदाहं समतीतानि
वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि
मां तु वेद न कश्चन ॥ २६ ॥

சென்றன நிகழ்வன வருவன ஆகிய உயிர்களை யெல்லாம் நானறிவேன். என்னை யறிந்தோர் எவருமிலர். 26

इच्छाद्वेषसमुत्थेन
द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं
सर्गे यान्ति परन्तप ॥ २७ ॥

விருப்பத்தாலும் பகைமையாலும் எழுந்த இருமைகளின் மயக்கத்தால், பாரதா, எல்லா உயிர்களும் மயங்கி விடுகின்றன, பகைவரைச் சுடுவோய். 27

येषां त्वन्तगतं पापं
जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता
भजन्ते मां दृढव्रताः ॥ २८ ॥

எந்த ஜனங்கள் பாவம் தீர்ந்து புண்ணியச் செயல்கள் செய்கின்றனரோ, அவர்கள் இருமைகளின் மயக்கம் தீர்ந்து திடவிரத முடையோராய் என்னை வழிபடுகின்றனர். 28

जरामरणमोक्षाय
मामाश्रित्य यतन्ति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्न-
मध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுமாறு என்னை வழிபட்டு முயற்சி செய்வோர் "அது" என்ற பிரமத்தை புணர்வார்; ஆத்மஞான முழுமையும் உணர்வார்; செய்கை யனைத்தையு முணர்வார். 29

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥३०॥

பூத ஞானம் தேவ ஞானம் யாக ஞானம் இவற்றுடன் என்னை யாவர் இறுதிக் காலத்திலேனும் அறிவாரோ, யோகத்திற் பொருந்திய சித்தமுடைய அன்னோரே அறிஞர். 30

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
ज्ञानयोगो नाम
सप्तमोऽध्यायः।

இங்ஙனம் உபநிஷத்தும், ப்ரம்ம வித்தையும், யோக சாஸ்த்ரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "ஞானயோகம்" என்ற ஏழாம் அத்யாயம் முற்றிற்று.

# अष्टमोऽध्यायः

## எட்டாம் அத்யாயம்.

### அக்ஷர ப்ரஹ்ம யோகம்.

---

अर्जुन उवाच—

किं तद्ब्रह्म किमध्यात्मं
किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्त-
मधिदैवं किमुच्यते ॥ १ ॥

அர்ஜுனன் சொல்லுகிறன்—

அந்த ப்ரம்மம் எது? ஆத்ம ஞானம் யாது? புருஷோத்தம, கர்ம மென்பது யாது? பூத ஞானம் யாது? தேவ ஞானம் என்பதெதனை? 1

अधियज्ञः कथं कोऽत्र
देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं
ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥

யாக ஞானம் என்பதென்னே? தம்மைத் தாம் கட்டியவர்களால் இறுதிக் காலத்திலேனும் இவ்வுலகத்தில் நீ அறியப்படுவ தெங்ஙனே? 2

श्रीभगवानुवाच—

अक्षरं ब्रह्म परमं
स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो
विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

பகவான் சொல்லுகிறான்—

அழிவற்ற பரம்பொருளே ப்ரம்மம். அதனியல்பை அறிதல் ஆத்மஞான மெனப்படும். உயிர்த்தன்மையை விளைவிக்கும் இயற்கை கர்ம மெனப்படுகிறது. 3

**अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।**
**अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥**

அழிவுபடும் இயற்கையைக் குறித்தது பூத
ஞானம். புருஷனைப் பற்றியது தேவ ஞானம்.
உடம்பெடுத்தோரில் உயர்ந்தவனே, உடம்புக்
குள் என்னை யறிதல் யாக ஞானம். 4

**अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।**
**यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥**

இறுதிக் காலத்தில் உடம்பைத் துறந்து
எனது நினைவுடன் இறப்போன் எனதியல்பை
எய்துவான். இதில் ஐயமில்லை. 5

**यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।**
**तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥**

ஒருவன் முடிவில் எவ் வெத் தன்மையை
நினைப்பானாய் உடலைத் துறக்கின்றானோ, அவன்
எப்போதும் அத்தன்மையிலே கருத்துடைய
வனாய் அதனையே எய்துவான். 6

तस्मात्सर्वेषु कालेषु
मामनुस्मर युध्य च ।
मय्यर्पितमनोबुद्धि-
र्मामेवैष्यस्यसंशयः ॥ ७ ॥

ஆகலால், எல்லாக் காலங்களிலும் என்னை நினை. போர் செய். என்னிடத்தே மனத்தையும், புத்தியையும் அர்ப்பணம் செய்வதனால் என்னையே பெறுவாய். 7

अभ्यासयोगयुक्तेन
चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं
याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

வேறிடஞ் செல்லாமே யோகம் பயிலும் சித்தத்துடன் சிந்தனை செய்துகொண்டிருப்போன் தேவனாகிய பரமபுருஷனை அடைகிறான். 8

कविं पुराणमनुशासितार-
मणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूप-
मादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

கவியை, பழையோனை, ஆள்வோனை, அணுவைக் காட்டிலும் அணுவை, எல்லாவற்றையும் தரிப்பவனை, எண்ணுதற்கரிய வடிவுடையோனை, இருளுக்கப்பால் கதிரோனது நிறங் கொண்டிருப்பானை, எவன் நினைக்கிறானோ, 9

प्रयाणकाले मनसाचलेन
भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्
स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १० ॥

இறுதிக் காலத்தில் அசைவற்ற மனத்துடன், புருவங்களினிடையே உயிரை நன்கேற்றி, பக்தியுடனும், யோக பலத்துடனும் எவன் நினைக்கிறானோ, அவன் அந்தக் கடவுளாகிய பரம புருஷனை அடைகிறான். 10

**यदक्षरं वेदविदो वदन्ति**
**विशन्ति यद्यतयो वीतरागाः ।**
**यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति**
**तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥**

எந்த நிலையை வேத முணர்ந்தோர் அழிவற்ற தென்பர், விருப்பமற்ற முனிகள் எதனுட் புகுவார், எதை விரும்பி பிரம்மசர்ய விரதம் காக்கப்படும், அந்த நிலையை உனக்குச் சுருக்க மாகச் சொல்லுகிறேன். 11

**सर्वद्वाराणि संयम्य**
**मनो हृदि निरुध्य च ।**
**मूर्ध्न्याधायात्मनः प्राण-**
**मास्थितो योगधारणाम् ॥ १२ ॥**

எல்லா வாயில்களையும் நன்கு கட்டி, மனதை உள்ளத்தில் நிறுத்தி, உயிரைத் தலையின் உச்சி யில் நிலை யுறுத்தி யோக தாரணையில் உறுதி பெற்று, 12

**ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।**
**यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥१३**

"ஓம்" என்ற ப்ரம்ம எழுத்தை ஒன்றையே ஜபித்துக்கொண்டு என்னை ஸ்மரிப்பவனாய் உடம்பைத் துறப்போன் பரம கதி பெறுகின்றான். 13

**अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।**
**तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥**

நித்ய யோகத் திசைந்து, பிறிது நினைப்பின்றி என்னை எப்பொழுதும் எண்ணும் யோகிக்கு நான் எளிதில் அகப்படுவேன், பார்த்தா. 14

**मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।**
**नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥**

என்னை யடைந்து பரம ஸித்தி பெற்ற மஹாத்மாக்கள் மறுபடி நிலையற்றதும் துன்பத்தின் ஆலயமும் ஆகிய மறுபிறப்பை யடைய மாட்டார். 15

**आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥**

அர்ஜுனா, ப்ரம்மலோக முதலாக எல்லா உலகங்களும் மறுபிறப்பு உடையன. குந்தி மகனே, என்னை யடைந்தவனுக்கு மறுபிறப்பு இல்லை. 16

**सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।**
**रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥**

ப்ரம்மத்துக்கு ஆயிரம் யுகம் ஒரு பகல், ஆயிரம் யுகம் ஓரிரவு. இதை யறிந்தோரே இராப்பகலியல்பறிவார். 17

**अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।**
**रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥**

'அவ்யக்தம்', அதாவது 'மறைவுபட்ட உலகத்தினின்றும் தோற்றப் பொருள்கள் வெளிப்படுகின்றன. * இரவு வந்தவுடன் அந்த மறைவுலகத்துக்கே மீண்டும் கழிந்து விடுகின்றன. 18

---

* இங்கு பகலும் இரவுமாவன மேற்கூறியபடி ப்ரம்மத்தின் பகலிரவுகளாகிய யுக ஸஹஸ்ரங்கள்,

**भूतग्रामः स एवायं**
**भूत्वा भूत्वा प्रलीयते ।**
**रात्र्यागमेऽवशः पार्थ**
**प्रभवत्यहरागमे ॥ १९ ॥**

இந்த பூதத் தொகுதி ஆகியாகித் தன் வச மின்றியே * இரவு வந்தவுடன் அழிகிறது; பார்த்தா, * பகல் வந்தவுடன் அது மீட்டும்
பிறக்கிறது. 19

**परस्तस्मात्तु भावोऽन्यो-**
**ऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।**
**यः स सर्वेषु भूतेषु**
**नश्यत्सु न विनश्यति ॥ २० ॥**

அவ்யக்தத்தினும் அவ்யக்தமாய் அதற்கப்பால் ஸநாதனபத மொன்றிருக்கிறது; எல்லா உயிர்
களும் அழிகையில் அப்பதம் அழியாது. 20

---

* இங்கு பகலுமிரவுமாவன மேற்கூறியபடி பிரம்மத்தின் பகலிரவுகளாகிய யுக ஸஹஸ்ராங் கள்.

**अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ २१ ॥**

அவ்யக்தம் அழிவற்றதெனப்படும். அதனையே பரமகதி யென்பர். எதை எய்தபின் மீள்வ தில்லையோ, அதுவே என் பரமபதம். 21

**पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।**
**यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥**

வேறிடஞ் செல்லாத பக்தியால், பார்த்தா, அந்தப் பரம புருஷன் எய்தப்படுவான். அவனுள்ளே எல்லாப் பொருள்களும் நிலைகொண் டன. அவன் இவ்வுலக மெங்கும் உள்ளூறப் பரந்திருக்கிறான். 22

**यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।**
**प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥२३॥**

யோகிகள் எக்காலத்தில் இறப்பதால் மீளா நிலையும் மீளு நிலையும் பெறுவாரோ, அக்காலத் தைச் சொல்லுகிறேன். 23

अग्निर्ज्योतिरहः शुक्लः
षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति
ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

தீ, ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணத்தின் ஆறு மாஸங்கள்; இவற்றில் இறக்கும் ப்ரம்ம ஞானிகள் ப்ரம்மத்தை யடைகிறார்கள். 24

धूमो रात्रिस्तथा कृष्णः
षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योति-
र्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

புகை, இரவு, கிருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயனத்தின் ஆறு மாஸங்கள்; இவற்றில் இறக்கும் யோகி சந்திர வொளியைப் பெற்றிருந்து மீளுகிறான். 25

**शुक्लकृष्णे गती ह्येते**
**जगतः शाश्वते मते ।**
**एकया यात्यनावृत्ति-**
**मन्ययावर्तते पुनः ॥ २६ ॥**

உலகத்தில் இந்த ஒளி வழியும், இருள் வழியும் சாசுவதமாகக் கருதப்பட்டன. இவற்றுள் ஒன்றினால் மனிதன் மீளாப் பதம் பெறுவான். மற்றொன்று மீளும் பதந் தருவது. 26

**नैते सृती पार्थ जान-**
**न्योगी मुह्यति कश्चन ।**
**तस्मात्सर्वेषु कालेषु**
**योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥**

இவ்வழிக ளிரண்டையும் உணர்ந்தால் அப்பால் யோகி மயக்கமுறுவதில்லை. ஆதலால், அர்ஜுனா, எப்போதும் யோகத்தில் கலந்திரு. 27

वेदेषु यज्ञेषु तपःसु चैव
दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा
योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८ ॥

இதனை யறிவதால் யோகி வேதங்களிலும் தவங்களிலும், தானங்களிலும் காட்டிய தூய்மைப் பயனைக் கடந்து, ஆதி நிலையாகிய பர நிலையை எய்துகிறான். 28

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
अक्षरब्रह्मयोगो नामाष्टमोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் ப்ரம்ம வித்தையும்
யோக சாஸ்திரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் ‘அக்ஷரப்ரஹ்மயோகம்’
என்ற எட்டாம் அத்யாயம் முற்றிற்று.

# नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்யாயம்.

## ராஜவித்யா ராஜரஹஸ்யயோகம்.

श्रीभगवानुवाच—

**इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।**
**ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥**

கடவுள் சொல்லுகிறான்—

*அஸூயை யற்றவனாகிய உனக்கு இந்த அதி ரஹஸ்யமான ஞானத்தை விஞ்ஞானத்துடன் சொல்லுகிறேன். இதை யறிவதால் தீமையி லிருந்து விடுபடுவாய்.* 1

**राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।**
**प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥**

*ராஜவித்தை, ராஜரஹஸ்யம், தூய்மை தருவதில் மிக மாண்டது, கண்ணெதிரே காண்டற்குரியது, அறத்துக் கிசைந்தது, செய்தற்கு மிக எளிது, அழிவற்றது.* 2

**अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥**

பகையைச் சுடுவோய், இவ்வறத்தில் நம்பிக்கையற்ற மனிதர் என்னை எய்தாமே மீட்டும் நரக ஸம்ஸாரப் பாதைகளில் மீளுகின்றனர். 3

**मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥४॥**

அவ்யக்த வடிவாய் நான் இவ்வுலக முழுமையும் சூழ்ந்திருக்கிறேன். என்னிடத்தே பூதங்களெல்லாம் நிலைபெற்றன. அவற்றுட்பட்டதன்று என் நிலை. 4

**न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥**

(மற்றொரு வகையால் நோக்குமிடத்தே) பூதங்கள் என்னுள் நிற்பனவு மல்ல. என் ஈசுவர யோகத்தின் பெருமையை இங்கு பார். பூதங்களை தரிக்கிறேன். அவற்றுட்பட்டேனல்லேன், என் ஆத்மாவில் பூத சிந்தனை இயல்கிறது. 5

**यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।**
**तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥६॥**

எங்கும் இயல்வானும் பெரியானுமாகிய காற்று எப்படி எப்போதும் வானில் நிலைபெற்றிருக்கிறான், அப்படியே பொருள்களெல்லாம் என்னுள் நிலைபெற்றன வென்று தெரிந்துகொள். 6

**सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।**
**कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥**

குந்தி மகனே, கற்ப நாசத்தில் எல்லா உயிர்களும் என் இயல்பை எய்துகின்றன. மறுபடி கற்பத் தொடக்கத்தில் நான் அவற்றைப் படைக்கிறேன். 7

**प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।**
**भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥**

என் சக்தியில் உறுதி கொண்டு மீட்டு மீட்டும் பூதத் தொகுதி முழுதையும் என் வசமின்றி, சக்தி, அதாவது இயற்கையின் வசத்தால் நான் படைக்கிறேன். 8

**न च मां तानि कर्माणि निबध्नन्ति धनंजय ।**
**उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥**

தனஞ்ஜயா, என்னை அத்தொழில்கள் தளை யுறுத்தா. அவ் வினைகளினிடையே நான் மேற் பட்டவன் போல் அமர்ந்திருக்கிறேன். 9

**मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।**
**हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥**

என் மேற்பார்வையில் * சக்தி சராசர உல கங்களைப் பெறுகிறாள். குந்திமகனே, இந்த ஹேதுவால் உலகம் சுழல்கிறது. 10

---

* சக்தி, இயற்கை, ப்ரக்ருதி (Nature) என்ற சொற்கள் ஒரே பொருளுடையன. அஃதே, ஹேது அல்லது காரணம் என்றும் சொல்லப் படும். உலகத் தோற்றத்துக்கு அதுவே காரண மாதலாலும், ப்ரம்மம் குணாதீத மாகையால் காரணமென்று சொல்லத் தகாததாலும், ப்ரம்மம் பரம பொருள்; சுத்த ஸாக்ஷி.

**अवजानन्ति मां मूढा**
**मानुषीं तनुमाश्रितम् ।**
**परं भावमजानन्तो**
**मम भूतमहेश्वरम् ॥ ११ ॥**

மனுஷ சரீரந் தரித்த என்னை மூடர் புறக்கணிக்கிறார்கள். உயிர்களுக் கெல்லாம் உயர் தலைவன் நான் என்ற என் பரம நிலையை அவர்கள் அறிகிலர். 11

**मोघाशा मोघकर्माणो**
**मोघज्ञाना विचेतसः ।**
**राक्षसीमासुरीं चैव**
**प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥**

வீணாசை யுடையோர், வீண் செயலாளர், வீணறிவாளர், மதியற்றோர், மயக்கத்துக்கு இடமான ராக்ஷஸ ஆஸுர மோஹினி சக்திகளைச் சார்ந்து நிற்கின்றனர். [ராக்ஷஸ, ஆஸுர மோஹினி சக்திகளாவன—அவா, குரூரம், மயக்கம் என்ற சித்த இயல்புகள்.] 12

**महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।**
**भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥१३॥**

பார்த்தா, மஹாத்மாக்கள் தெய்விக இயல்பைக் கைக்கொண்டு பூத முதலும் கேடற்றவனுமாகிய என்னை வேறுமனம் இன்றி வழிபடுகிறார்கள். 13

**सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।**
**नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥**

திடவிரதத்துடன் முயற்சி புரிவோராய், எப்போதும் என்னைப் புகழ்வோராய், என்னை பக்தியால் வணங்குவோராய் நித்ய யோகிகள் உபாஸிக்கிறார்கள். 14

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।**
**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥१५॥**

வேறு சிலர் ஞான வேள்வியால் வேட்போராய், என்னை ஒருமையாகவும் பன்மையாகவும் பலவாறாக எல்லா விடத்தும் வழிபடுகிறார்கள். 15

अहं क्रतुरहं यज्ञः
स्वधाहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाज्य-
महमग्निरहं हुतम् ॥ १६ ॥

நான் ஹோமம்; நான் யாகம்; நான் ‘ஸ்வதா’ என்ற வாழ்த்துரை; நான் மருந்து; நான் மந்த்ரம்; நான் நெய்; நான் தீ, நான் அவி. 16

पिताहमस्य जगतो
माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोङ्कार
ऋक् साम यजुरेव च ॥ १७ ॥

இந்த உலகத்தின் அப்பன் நான்; இதன் அம்மா நான்; இதை தரிப்போன் நான்; இதன் பாட்டன் நான்; இதன் அறியப்படு பொருள் நான்; தூய்மை செய்வது நான்; ஓங்காரம் நான்; நான் ரிக்; நான் ஸாமம்; நான் யஜுஸ். 17

**गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।**
**प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥**

இவ்வுலகத்தின் புகல், இதனிறைவன், இதன் கரி, இதனுறையுள், இதன் சரண், இதன் தோழன், இதன் தொடக்கம், இதன் அழிவு, இதன் இடம், இதன் நிலை, இதன் அழியாத விதை. 18

**तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।**
**अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥**

நான் வெப்பந் தருகிறேன்; மழையை நான் கட்டி விடுகிறேன், நான் அதனைப் பெய்விக்கிறேன். நானே அமிர்தம்; நானே மரணம். அர்ஜுனா, உள்ளதும் யான், இல்லதும் யான். 19

**त्रैविद्या मां सोमपाः पूतपापा**
**यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।**
**ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक-**
**मश्नन्ति दिव्यान् दिवि देवभोगान् ॥२०**

ஸோம முண்டார், பாவ மகன்றார், மூன்று வேத மறிந்தார், என்னை வேள்விகளால் வேட்டு வானுலகு தர வேண்டுகின்றனர். அவர்கள் புண்ய ஸ்தானமாகிய தேவேந்த்ர லோகத்தை யெய்தி, வானுலகில் திவ்யமான தேவ போகங்களைத் துய்க்கிறார்கள். 20

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं**
**क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।**
**एवं त्रयीधर्ममनुप्रपन्नाः**
**गतागतं कामकामा लभन्ते ॥ २१ ॥**

விரிவாகிய வானுலகத்திலே இன்புற்றுப் புண்ணியந் தீர்ந்தவுடன், மறுபடி அழிவுடைய மனித உலகத்துக்குத் திரும்புகிறார்கள். இப்படி மூன்று வேத முறைகளைத் தொழுவார் விருப்பங்களில் வீழ்ந்து உழல்வார். 21

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम्॥२२॥**

வேறு நினைப்பின்றி என்னை வழிபடுவார் யாவரோ, அந்த நித்திய யோகிகளின் நன்மை தீமையை நான் பொறுப்பேன். 22

**येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयान्विताः ।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥२३॥**

அன்ய தேவதைகளை நம்பிக்கையுடன் தொழும் அன்பரும், குந்தியின் மகனே, விதி வழுவி என்னையே தொழுகின்றனர். 23

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥२४**

நானே வேள்விகளில் எல்லாம் உணவு உண்பவன்; நானே தலைவன்; என்னை மனிதர் உள்ளபடி அறியார்; ஆதலால் நழுவி வீழ்வார். 24

यान्ति देवव्रता देवान्
पितॄन् यान्ति पितृव्रताः।
भूतानि यान्ति भूतेज्या
यान्ति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥

தேவ விரதிகள் தேவரை எய்துவார்.
பிதிர்க்களை நோற்பார் பிதிர்க்களையடைவார்;
பூதங்களைத்தொழுவார் பூதங்களை யடைவார்.
என்னை வேட்போர் என்னை எய்துவார். 25

पत्रं पुष्पं फलं तोयं
यो मे भक्त्या प्रयच्छति।
तदहं भक्त्युपहृत-
मश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥

இலையேனும், பூவேனும், கனியேனும், நீரேனும், அன்புடனே யெனக்கு அளிப்பவன் ஆயின், முயற்சி யுடைய அன்னவன் அன்புடன் அளித்ததை உண்பேன் யான். 26

यत् करोषि यदश्नासि
यज्जुहोषि ददासि यत्।
यत् तपस्यसि कौन्तेय
तत् कुरुष्व मदर्पणम्॥ २७॥

நீ எது செய்பினும் எதனை நீ உண்பினும், எதை நீ ஹோமம் பண்ணினும், எதனைக் கொடுத்தாலும், எத்தவத்தைச் செய்தாலும், குந்திமகனே, கடவுளுக் கர்ப்பண மென்று செய். 27

शुभाशुभफलैरेवं
मोक्ष्यसे कर्मबन्धनैः।
संन्यासयोगयुक्तात्मा
विमुक्तो मामुपैष्यसि॥ २८॥

இங்ஙனம் மங்களம் அமங்களமாகிய பயன் களைத் தருவனவாகிய கர்மத் தளைகளினின்றும் விடுபடுவாய். துறவெனும் யோகத் திசைந்து விடுதலை பெறுவாய், என்னையும் பெறுவாய். 28

समोऽहं सर्वभूतेषु
न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या
मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥

நான் எல்லா உயிர்களிடத்தும் ஸமமானவன். எனக்குப் பகைவனுமில்லை, நண்பனுமில்லை. ஆனால், என்னை அன்புடன் தொழுவோர்—அன்னவர் என்னகத் தமர்ந்தார்; அவரகத்து நான் உளேன். 29

अपि चेत् सुदुराचारो
भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः
सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

மிகவும் கொடிய நடையோனாயினும் பிறிது வழி படாதே என்னை வழிபடுவோன் நல்லோனென்றே கருதுக; ஏனெனில், நன்கு முயல் இன்றான் ஆதலின். 30

क्षिप्रं भवति धर्मात्मा
शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि
न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

அன்னவன் விரைவிலே அறவாளனாவான்,
நித்ய சாந்தியு மெய்துவான்.
குந்தி மகனே; குறிக்கொள்!
என தன்பன் சாகமாட்டான். 81

मां हि पार्थ व्यपाश्रित्य
येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रा-
स्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥

பாவிகளென்னைப் பணிவாராயினும்,
மாதரேனும், வைசியரேனும்,
சூத்திரரும் பரகதி பெறுவார். 82

किं पुनर्ब्राह्मणाः पुण्या
भक्ता राजर्षयस्तथा।
अनित्यमसुखं लोक-
मिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

அப்படி யிருக்கத் தூய்மை யார்ந்த
அந்தணரும் ராஜரிஷிகளும்
எனக் கன்பராயின், என்னே! ஆதலால்;
நிலையற்றதும் இன்ப மற்றதுமாகிய
இவ்வுலகம் பிறவி யெய்திய நீ
என்னை வழிபடக் கடவாய். 33

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥३४॥

மனத்தை யெனக்காக்கிவிடு; பக்தி யெனக்காக்கு; என்னைத் தொழுக. என்னைப் பரமாகக் கொள்க. இங்ஙன மியற்றும் தற்கலப்பு யோகத்தால் என்னையே எய்துவாய். 34

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे राजविद्याराजगुह्ययोगो नाम नवमोऽध्यायः ।**

இங்ஙனம் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும் யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் 'ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்' என்ற ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

# दशमोऽध्यायः

## பத்தாம் அத்யாயம்.

### விபூதியோகம்,

श्रीभगवानुवाच—

भूय एव महाबाहो
    शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय
    वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

பகவான் சொல்லுகிறன்—

பெருந்தோளுடையாய், பின்னுமோர் முறை நான் சொலப் புகும் மிகவுயர் சொல்லினைக் கேளாய்; நீ யெனக்கு உகந்தவன்; ஆதலால், நினது நலம் வேண்டி யிங்கதனை விளம்புவேன் நினக்கே.

न मे विदुः सुरगणाः
प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां
महर्षीणां च सर्वशः ॥ २ ॥

வானவர் கணங்கள் என் மஹிமையை உணரார்; பெருந்தகை முனிவருமுணரார்; யாங்கணும், வானோர்கட்கும் மஹரிஷிகட்கும் ஆதி நானே. 2

यो मामजमनादिं च
वेत्ति लोकमहेश्वरम् ।
असम्मूढः स मर्त्येषु
सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

பிறப்பதில்லான், தொடங்குதலிலாதான், உலகின் பெருமுதலான என்றனை யுணர்வோன், மானுடருள்ளே மயக்கந் தீர்ந்தான், பாவமனைத்தினும் விடுதலைப் பட்டான். 3

बुद्धिर्ज्ञानमसम्मोहः
क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवोऽभावो
भयं चाभयमेव च ॥ ४ ॥

மதியும், ஞானமும், மயக்க மின்மையும், பொறுத்தலும், வாய்மையும், அடக்கமும், அமைதியும், இன்பமும், துன்பமும், உண்மையும், இன்மையும், அச்சமும், அஞ்சாமையும், 4

अहिंसा समता तुष्टि-
स्तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां
मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

இன்புறுத் தாமையும், நடுமையும், மகிழ்ச்சியும், ஈகையுந், தவமும், இகழும், புகழும், இங்ஙனம் பலபடுமியல்புக ளெல்லாம் என்னிடம் பெறுவன உயிர்கள். 5

महर्षयः सप्त पूर्वे
चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता
येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

முன்னை மஹரிஷிகள் எழுவரும் நான்கு மனுக்களும் மனத்தால் என்னியல்பு எய்தினர். அவர்களுடைய மரபினரே இம் மக்களெல்லாரும். 6

एतां विभूतिं योगं च
मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकम्पेन योगेन
युज्यते नात्र संशयः ॥ ७ ॥

இத் தகைத் தாகும் எனது பெருமையையும் யோகந்தனையும் உள்ளவா றுணர்வோன் அசைவிலா யோகத் தமர்வான்; இதிலோர் ஐயமில்லை. 7

अहं सर्वस्य प्रभवो
मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजन्ते मां
बुधा भावसमन्विताः ॥ ८ ॥

நான் அனைத்திற்கும் தொடக்கம். என்னிட
மிருந்தே எல்லாம் இயலும். இங்ஙன முணர்
ந்த புலவர் என்னை அன்புடன் தொழுவார். 8

मच्चित्ता मद्गतप्राणा
बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं
तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥

அகத்தினை யென்பால் வைத்து, உயிரை
யென்னுளே புகுத்தி, ஒருவரை யொருவர்
உணர்விப்பாராய், எக்காலும் தம்முள் என்னைக்
குறித்தியம்புவார்; அன்னோர் மகிழ்ச்சியும் இன்ப
மும் அடைவார். 9

तेषां सततयुक्तानां
भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं
येन मामुपयान्ति ते ॥ १० ॥

எப்போதும் யோகத் திருப்பாராகி அன்புடன் என்னை வழிபடும் அன்னோர்க்கு, யான் புத்தி யோகம் அளிப்பேன், இதனால் என்னை யவர் எய்துவார். 10

तेषामेवानुकम्पार्थ-
महमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो
ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

அன்னவர்க்கிரங்கி யான் அன்னவர் ஆத்ம இயல்பு யாகுகி ஒளியுடை ஞானவிளக்கால் அவரிடை அஞ்ஞானத்தால் தோன்று மிருளைத் தொலைப்பேன். 11

अर्जुन उवाच—

परं ब्रह्म परं धाम
पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्य-
मादिदेवमजं विभुम् ॥ १२ ॥

அர்ஜுனன் சொல்லுகிறன்—

நீயே பரப்ரம்மம், நீயே பர வீடு, தூய்மை யனைத்திலுஞ் சிறப்புடைத் தூய்மை நீ. நின்னையே "நித்ய புருஷ" னென்றும், ஆதிதேவ னென்றும், பிறப்பிலா னென்றும், இறைமைக் கடவுளென்றும்; 12

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३

முனிவரெல்லாரு மொழிகிறூர்; தேவரிஷி நாரதரு மங்ஙனே நவில்கிறூர்; அஸிதரும் தேவலரும் வியாஸரும் அங்ஙனமே செப்புகிறூர். இங்கு நீ நேரே யெனக்கு அதை யுரைக்கின்றூய்.

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन् व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥

கேசவா, நினது *இளவி யனைத்தையும் மெய் யெனக் கொண்டேன். பகவனே, விண்ணவரும் அஸுரரும் நின் விளக்கத்தை யறிவாரோ? 14

स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥

புருஷோத்தமா, உன்னை நீயே அறிவாய்.
பூதங்களாளாய்! பூதத் தலைவனே!
தேவ தேவ! வையத் திறைவா! 15

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥

எந்த மஹிமைகளால் நீ இவ்வுலகங்களைச் சூழ்ந்து நிற்கிறாயோ, அந்த நின் மஹிமைகள் தேவத்தன்மை யுடையன. அவற்றை எனக்கு மிச்சமின்றி உணர்த்த வேண்டுகிறேன். 16

---

* இளவி-சொல்.

**कथं विद्यामहं योगिस्त्वां सदा परिचिन्तयन् ।**
**केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन् मया ॥**

யோகி எப்போதும் உன்னையே சிந்தித்து நின்னை யுணருமாறெங்ஙனே? பகவனே! எவ்வெப் படிகளில் நின்னை யான் கருதல் வேண்டும்?

**विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥**

ஜனார்த்தனா, நின் யோகத்தையும் பெருமையையும் விரித்து மற்றொரு முறை சொல்க. அமிர்தம் போன்ற நின் சொற்கள் எனக்குத் தெவிட்டவில்லை. 18

**श्रीभगवानुवाच —**

**हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।**
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥**

பகவான் சொல்லுகிறான்:—

அச்ச! என் ஆத்மப் பெருமைகள் தேவத் தன்மை உடையனவே. அவற்றுள் பிரதானமானவற்றை நினக்குச் சொல்லுகிறேன். எனது விஸ்தாரத்துக்கு முடிவில்லை. 19

**अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।**
**अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥२० ॥**

அர்ஜுநனே, உயிர்களனைத்தின் உள்ளே நிற்கும் ஆத்மா நான். அவ்வுயிர்களின் ஆதி நான். இடையும் அவற்றின் இறுதியும் யானே. 20

**आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।**
**मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥**

ஆதித்யர்களில் நான் விஷ்ணு; ஒளிகளில் நான் கதிர் சான்ற ஞாயிறு; காற்றுக்களில் மரீசி; நக்ஷத்திரங்களில் சந்திரன். 21

**वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।**
**इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥**

வேதங்களில் யான் ஸாம வேதம்; தேவரில் இந்திரன்; புலன்களில் மனம் யான்; உயிர்களிடத்தே உணர்வு நான். 22

रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥

ருத்ரர்களில் நான் சங்கரன்; இயக்கர் அரக்கருள் யான் குபேரன். வஸுக்களில் நான் தீ; மலைகளில் மேரு. 23

पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४

பார்த்தா, புரோஹிதர்களில் தலைவனாகிய ப்ருஹஸ்பதி நான் என்றுணர். படைத்தலைவரில் நான் கந்தன். நீர்நிலைகளில் நான் கடல். 24

महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥

மஹரிஷிகளில் நான் பிருகு; வாக்குக்களில் நான் "ஓம்" என்ற ஓரெழுத்து; யக்ஞங்களில் நான் ஜபயக்ஞம்; ஸ்தாவரங்களில் நான் ஹிமாலயம்.

अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥

மரங்களனைத்திலும் நான் அரச மரம்; தேவரிஷிகளில் நான் நாரதன்; கந்தர்வருள்ளே நான் சித்திரரதன்; ஸித்தர்களில் கபில முனி. 26

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७

குதிரைகளினிடையே நான் அமிர்தத்தில் பிறந்த உச்சைசிரவ மென்றுணர். யானைகளில் என்னை ஐராவத மென்றும், மனிதரில் அரச னென்றும் அறி. 27

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥

ஆயுதங்களில் நான் வஜ்ரம்; பசுக்களில் நான் காமதேனு; பிறப்பிப்போரில் நான் மன்மதன்; பாம்புகளில் வாஸுகி. 28

अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९

நாகர்களினிடை நான் அநந்தன்; நீர் வாழ்வோரில் வருணன்; பிதிர்க்களில் நான் அர்யமான்; தம்மைக் கட்டினவர்களில் நான் யமன். 29

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥३०

அஸுரரில் ப்ரஹ்லாதன் யான்; இயங்குவனவற்றில் காலம் யான்; விலங்குகளில் சிங்கம்; பறவைகளில் கருடன். 30

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥

தூய்மை செய்வனவற்றுள்ளே காற்று நான்; படை தரித்தோரில் நான் ராமன்; மீன்களில் நான் சுறா; ஆறுகளில் கங்கை. 31

**सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।**
**अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥३२**

படைப்புக்களின் ஆதியும் அந்தமும் நான். அர்ஜுனா, வித்தைகளில் நான் அத்யாத்ம வித்தை; பேசுவோரிடையே நான் பேச்சு. 32

**अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।**
**अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ॥३३**

எழுத்துக்களில் நான் அகரம்; புணர்ப்புக் களில் இரட்டைப் புணர்ப்பு; நான் அழிவற்ற காலம். எப்பாரிசத்தும் கமப்போன் யானே. 33

**मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।**
**कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा**

எல்லாவற்றையும் அழிக்கும் மரணம் நான். எதிர்காலப் பொருள்களின் பிறப்பு நான். பெண் களிடத்து நான் கீர்த்தி, வாக்கு, நினைவு, மேதை, ஸ்திதி, பொறை. 34

बृहत्साम तथा साम्नां
गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽह-
मृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

அங்ஙனமே, ஸாமங்களில் நான் "ப்ருஹத் ஸாமம்" என்ற பெரிய ஸாமம், சந்தஸ்களில் நான் காயத்திரி; மாஸங்களில் நான் மார்கழி; பருவங்களில் மலர் சான்ற இளவேனில். 35

द्यूतं छलयतामस्मि
तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि
सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

வஞ்சகரின் சூது நான்; ஒளியுடையோரின் ஒளி நான். நான் வெற்றி; நான் நிச்சயம்; உண்மையுடையோரின் உண்மை நான். 36

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनंजयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥३७॥

வ்ருஷ்ணி குலத்தாரில் நான் வாஸுதேவன்; பாண்டவர்களில் தனஞ்ஜயன்; முனிகளில் வ்யாஸன்; கவிகளில் சுக்ர கவி. 37

दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम्॥३८

ஆள்வோரிடத்தே கோல் நான்; வெற்றியை விரும்புவோரிடத்தே நீதி நான். ரஹஸ்யங்களில் நான் மௌனம்; ஞான முடையோரிடத்தே நான் ஞானம். 38

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥

எல்லா உயிர்களிலும் விதை எதுவோ அது நான். அர்ஜுனா, சராசரங்களில் என்னை யின்றி யுள்ள பூதமொன்றில்லை. 39

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप ।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥४० ॥**

பார்த்தா, என் திவ்ய மஹிமைகளுக்கு முடிவில்லை. விஸ்தாரமான என் மஹிமைகளில் ஒருத்தேச மாத்திரமே உனக்குரைத்தேன். 40

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसम्भवम् ॥ ४१**

எதெது பெருமையுடைத்து, உண்மை யுடைத்து, அழகுடைத்து, வலிமை யுடைத்து— அது வெல்லாம் எனது ஒளியின் அம்சத்தில் பிறந்ததென்றுணர். 41

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।**
**विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥४२**

அன்றி, இதைப் பலவாறாகத் தெரிவதில் உனக்குப் பயன் யாது? எனது கலை யொன்றால் இவ் வையகத்தை நிலை நிறுத்தி யுள்ளேன். 42

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
विभूतियोगो नाम
दशमोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும், ப்ரம்ம வித்தையும்
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "விபூதியோகம்" என்ற
பத்தாம் அத்யாயம் முற்றிற்று.

# एकादशोऽध्यायः

## பதினொன்றும் அத்யாயம்.

### விசுவரூப தர்சனம்.

अर्जुन उवाच—

मदनुग्रहाय परमं
गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन
मोहोऽयं विगतो मम ॥ १ ॥

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

என் மீதருள் பூண்டு, எனக்கிரங்கி, ஆத்ம ஞான மென்ற பரம ரஹஸ்யத்தை நீ எனக்கு உரைத்தது கேட்டு, என் மயக்கம் தீர்ந்து போயிற்று. 1

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥**

உயிர்களின் தோற்றத்தையும் அழிவையும் பற்றி விரிவுறக் கேட்டேன். தாமரை யிதழ் போன்ற விழிகளை யுடையாய், நின் கேடற்ற பெருமையையுங் கேட்டேன். 2

**एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वरम् ॥**
**द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥**

பரமேசுவரா, புருஷோத்தமா, நின்னைப் பற்றி நீ எனக்குச் சொல்லியபடியே, நின் ஈசுவர ரூபத்தைக் காண விரும்புகிறேன். 3

**मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।**
**योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥**

இறைவனே, யோகேசுவரா, அதை நான் காணுதல் ஸாத்ய மென்று நீ கருதுவா யெனில், எனக்கு நின் அழிவற்ற ஆத்மாவைக் காட்டுக. 4

श्रीभगवानुवाच—

पश्य मे पार्थ रूपाणि
शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि
नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

பகவான் சொல்லுகிறான் :—

*பல நூறாகவும், பல்லாயிரமாகவும்,
வகை பல, நிறம் பல, அளவு பலவாகும்
என் திவ்ய ரூபங்களைப் பார்! பார்த்தா.* 5

पश्यादित्यान् वसून् रुद्रा-
नश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि
पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

*ஆதித்யர்களைப் பார்; வஸுக்களைப் பார்; அசுவினி தேவரைப் பார்; மருத்துக்களைப் பார்; பாரதா, இதற்கு முன் கண்டிராத பல ஆச்சர்யங்களைப் பார்.* 6

इहैकस्थं जगत्कृत्स्नं
पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश
यच्चान्यद् द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

அர்ஜுனா, இன்று, இங்கே, என்னுடலில் சராசரமான உலக முழுதும் ஒருங்கு நிற்பதைப் பார்; இன்னும் வேறு நீ எதைக் காண விரும்பி னும், அதை இங்கு காண். 7

न तु मां शक्यसे द्रष्टु-
मनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः
पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

உன்னுடைய இயற்கையான இக் கண்களால் என்னைப் பார்க்க முடியாது. உனக்கு ஞானக் கண் கொடுக்கிறேன். என்னுடைய ஈசுவர யோகத்தைப் பார். 8

सञ्जय उवाच—

एवमुक्त्वा ततो राजन्
महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय
परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறன்—

அரசனே, இவ்வா றுரைத்துவிட்டு, அப்பால் பெரிய யோகத் தலைவனுகிய ஹரி பார்த்தனுக்கு மிக உயர்ந்த தன் கடவுள் வடிவைக் காட்டி 9
ஞன்.

अनेकवक्त्रनयन-
मनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं
दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

(அவ்வடிவம்) பல வாய்களும் பல விழிகளு முடையது; பல அற்புதக் காட்சிகளுடையது; பல திவ்யாபரணங்கள் பூண்டது; பல தெய் 10
விகப் படைகள் ஏந்தியது.

दिव्यमाल्याम्बरधरं
दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देव-
मनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥

திவ்ய மாலைகளும் ஆடைகளும் புனைந்தது; திவ்ய கந்தங்கள் பூசியது; எல்லா வியப்புக் களும் சான்றது; எல்லை யற்றது; எங்கும் முகங்களுடைய தேவ ரூபம். 11

दिवि सूर्यसहस्रस्य
भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्या-
द्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

வானத்தில் ஒருங்கே ஆயிரம் இரவிகள் எழுவாராயின் அங்கு தோன்றும் ஒளியை அந்த மஹாத்மாவின் ஒளிக்கு நிகராகக் கூறலாம். 12

तत्रैकस्थं जगत्कृत्स्नं
प्रविभक्तमनेकधा ।
अपश्यद् देवदेवस्य
शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥

அங்கு பல பகுதிப்பட்டதாய், வையக முழுதும், அந்த தேவ தேவனுடைய சரீரத்தில் ஒருங்குற்று நிற்பதை அப்போது பாண்டவன் கண்டான். 13

ततः स विस्मयाविष्टो
हृष्टरोमा धनञ्जयः ।
प्रणम्य शिरसा देवं
कृताञ्जलिरभाषत ॥ १४ ॥

அப்போது தனஞ்ஜயன் பெரு வியப்பெய்தி, மயிர் சிலிர்த்து, அக் கடவுளை முடியால் வணங்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு சொல்லுகிறான். 14

अर्जुन उवाच—

पश्यामि देवांस्तव देव देहे
सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थ-
मृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான்—

தேவனே, நின் உடலில் எல்லாத்தேவர்களையும் காண்கிறேன். பூத வகைகளின் தொகுதிகளைக் காண்கிறேன். தாமரை மலரில் வீற்றிருக்கும் ஈசனாகிய பிரமனையும், எல்லா ரிஷிகளையும் தேவ ஸர்ப்பங்களையும் இங்கு காண்கிறேன். 15

अनेकबाहूदरवक्त्रनेत्रं
पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।
नान्तं न मध्यं न पुनस्तवादिं
पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ॥ १६ ॥

பல தோளும், பல வயிறும், பல வாயும், பல விழிகளுமுடைய எல்லையற்ற வடிவிலே நின்னை எங்கணும் காண்கிறேன். எல்லாவற்றுக்கும் ஈசனே, எல்லாந் தன் வடிவாகக் கொண்டவனே, உனக்கு முடிவேனும், இடையேனும், தொடக்கமேனும் காண்கிலேன். 16

किरीटिनं गदिनं चक्रिणं च
तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ता-
द्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

மகுடமும் தண்டும் வலயமும் * தரித்தாய், ஒளித்திரளாகி யாங்கணும் ஒளிர்வாய், தழல் படு தீயும் ஞாயிறும் போல அளவிடற் கரியாயாகு நினைக் காண்கிறேன். 17

त्वमक्षरं परमं वेदितव्यं
त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता
सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥

அழிவிலாய், அறிதற்குரியனவற்றில் மிகவுஞ் சிறந்தாய், வையத்தின் உயர் தனி உறையுளாவாய், கேடிலாய், என்று மியல் அறத்தினைக் காப்பாய், 'ஸநாதன புருஷன்' நீ யெனக் கொண்டேன். 18

---

* வலயம் - சக்கரம்.

अनादिमध्यान्तमनन्तवीर्य-
मनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं
स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९ ॥

ஆதியும் நடுவும் அந்தமு மில்லாய், வரம்பிலா விறலினை, கணக்கிலாத் தோளினை, ஞாயிறுந் திங்களு நயனமாக் கொண்டனை, எரியுங்கனல் போலியலு முகத்தினை, ஒளியால் முழுமையுலகையுங் கொளுத்துவாய், இங்ஙன முன்னைக் காண்கிறேன். 19

द्यावापृथिव्योरिदमन्तरं हि
व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं
लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

வானத்துக்கும் பூமிக்கும் நடுவேயுள்ள இடைவெளியும் எல்லாத் திசைகளும் நின்னால் நிரப்புற்றிருக்கின்றன. உன்னுடைய அற்புதமும் உக்ரமுமான இவ் வடிவத்தைக் கண்டு மூன்று உலகங்களும் சோர்வெய்துகின்றன. 20

अमी हि त्वां सुरसङ्घा विशन्ति
केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः
स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः॥२१

இந்த வானவர் கூட்டமெல்லாம் நின்னுள்ளே புகுகின்றது. சிலர் அச்சமெய்தி நின்னைக் கை கூப்பிப் புகழ்கின்றனர். மஹரிஷிகளும் ஸித்தர் களுமாகிய கூட்டத்தார் நின்னை வண்மை யுடைய புகழுரைகள் சொல்லிப் புகழ்கின்றனர்.21

रुद्रादित्या वसवो ये च साध्या
विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गन्धर्वयक्षासुरसिद्धसङ्घाः
वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२॥

* ருத்ரர், ஆதித்யர், வஸுக்கள், ஸாத்யர் விசுவேதேவர், அசுவினி தேவர், மருத்துக்கள், உஷ்மபர், கந்தர்வர், யக்ஷர், அஸுரர், ஸித்தர், இக் கூட்டத்தார்க ளெல்லாரும் நின்னை வியப் புடன் நோக்குகின்றனர். 22

---

* இங்கு கூறப்படும் ருத்ரர் முதலாயினோர் தேவ வகுப்புக்களாவார்.

रूपं महत्ते वहुवक्त्रनेत्रं
महावाहो वहुवाहूरुपादम् ।
वहूदरं वहुदंष्ट्राकरालं
दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥

பெருந்தோளாய், பல வாய்களும், விழிகளும், பல கைகளும், பல கால்களும், பல வயிறுகளும், பல பயங்கரமான பற்களுமுடைய நின் பெரு வடிவைக் கண்டு, உலகங்கள் நடுங்குகின்றன, யானும் அங்ஙனமே. 23

नभःस्पृशं दीप्तमनेकवर्णं
व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा
धृतिं न विन्दामि शमं च विष्णो ॥२४॥

வானைத் தீண்டுவது, தழல்வது, பல வர்ணங்களுடையது, திறந்த வாய்களும் கனல்கின்ற விழிகளுமுடையது, இனைய நின் வடிவத்தைக் கண்டு, விஷ்ணுவே, எனக்கு நிலைகொள்ள வில்லை, யான் அமைதி காணவில்லை. 24

दंष्ट्राकरालानि च ते मुखानि
दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म
प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

அஞ்சு தரும் பற்களை யுடைத்தாய், ஊழித் தீ போன்ற நின் முகங்களைக் கண்ட அளவிலே, எனக்குத் திசைகள் தெரியவில்லை; சாந்தி தோன்றவில்லை. தேவர்களின் தலைவனே; வையகத்துக்கு உறைவிடம் ஆவாய்; அருள்செய்க. 25

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः
सर्वे सहैवावनिपालसंघैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ
सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥

இந்த த்ருதராஷ்ட்ரனின் மக்க ளெல்லாரும் மற்ற அரசக் கூட்டத்தார்களுடன் நின்னுள்ளே (புகுகின்றனர்). பீஷ்மனும், துரோணனும், ஸூதன் மகனாகிய இந்தக் கர்ணனும், நம்முடைய பக்கத்து முக்ய வீரர்களும் 26

वक्त्राणि ते त्वरमाणा विशन्ति
दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनान्तरेषु
संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७ ॥

கொடிய பற்களுடைய பயங்கரமான நின் வாய்களில் விரைவுற்று வீழ்கின்றனர். சிலர் நின் பல்லிடைகளில் அகப்பட்டுப் பொடிபட்ட தலையினராகக் காணப்படுகின்றனர். 27

यथा नदीनां बहवोऽम्बुवेगाः
समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीरा
विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥२८॥

பல ஆறுகளின் வெள்ளங்கள் கடலையே நோக்கி வந்து வீழ்வது போல், இந்த நரலோக வீரர் நின் சுடர்கின்ற வாய்களில் வந்து வீழ்கின்றனர், 28

यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा
विशन्ति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशन्ति लोका-
स्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

விளக்குப் பூச்சிகள் மிகவும் விரைவுடனெய்தி எரிகின்ற விளக்கில் வீழ்ந்து நாச முறுதல் போலே, உலகங்கள் மிகவும் விரைவுடன் நின் வாய்களில் வந்து விழுந்து நாச மடைகின்றன. 29

लेलिह्यसे ग्रसमानः समन्ता-
ल्लोकान् समग्रान् वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत् समग्रं
भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

கனல்கின்ற நின் வாய்களால் எப்புறத்தும் எல்லா உலகங்களையும் நீ நக்குகிறாய். விஷ்ணு! நின் உக்ரமான சுடர்கள் தம் கதிர்களால் வையமுழுதையும் நிரப்பிச் சுடுகின்றன. 30

आख्याहि मे को भवानुग्ररूपो
नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं
न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

உக்ர ரூபந் தரித்த நீ யார்? எனக்குரைத்திடுக. தேவர்களிற் சிறந்தாய், நின்னை வணங்குகிறேன். அருள் புரி. ஆதியாகிய உன்னை அறிய விரும்புகிறேன். இங்கு உனது தொழிலை அறிகிலேன். 31

श्रीभगवानुवाच—

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो
लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे
येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்—

உலகத்தை அழிக்கத் தலைப்பட்ட காலமே நான். மனிதர்களை இங்கு கொல்லத் தொடங்கியுள்ளேன். இங்கிரு திறத்துப் படைகளிலே நிற்கும் போராட்கள் அனைவரினும் உன்னைத் தவிர வேறு யாரும் மிஞ்ச மாட்டார்கள்.

तस्मात् त्वमुत्तिष्ठ यशो लभस्व
जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहताः पूर्वमेव
निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

ஆகலால் நீ எழுந்து நில்; புகழெய்து; பகைவரை வென்று செழிய ராஜ்யத்தை ஆள். நான் இவர்களை ஏற்கெனவே கொன்றாய் விட்டது. *இடக்கை வீரா, நீ வெளிக்காரணமாக மட்டும் நின்று தொழில் செய். 33

द्रोणं च भीष्मं च जयद्रथं च
कर्णं तथान्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा
युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४ ॥

துரோணனையும், பீஷ்மனையும், ஜயத்ரதனையும், கர்ணனையும் மற்ற யுத்த வீரர்களையும் நான் கொன்றாய் விட்டது. (வெளிப் படையாக) நீ கொல். அஞ்சாதே; போர் செய்; செருக்களத்தில் நின் பகைவரை வெல்வாய். 34

---

* இது பார்த்தன் பெயர்,

सञ्जय उवाच—

एतच्छ्रुत्वा वचनं केशवस्य
कृताञ्जलिर्वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं
सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—

கேசவன் சொல்லிய இவ்வார்த்தையைக் கேட்டுப் பார்த்தன் மெய்க் நடுக்கத்துடன் அஞ்சலி புரிந்தான். மீட்டும் கண்ணனை நமஸ்காரம் பண்ணி, அச்சத்துடன் வாய் குழறி வணங்கிச் சொல்லுகிறான். 35

अर्जुन उवाच—

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या
जगत् प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति
सर्वे नमस्यन्ति च सिद्धसंघाः ॥ ३६ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான்—

* ஹ்ருஷீகேசா, உன் பெருங்கீர்த்தியில் உலகம் களிப்பதும் இன்புறுவதும் பொருந்தும்.

---

* இது கண்ணன் பெயர்.

ராக்ஷஸர் அச்ச முற்றுத் திசைகளில் மறைகிறார்கள். ஸித்தர் குழாத்தினர் அனைவரும் நின்னை வணங்குகிறார்கள். 36

कस्माच्च ते न नमेरन् महात्मन्
गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनन्त देवेश जगन्निवास
त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

மஹாத்மாவே, நின்னை எங்ஙனம் வணங்காதிருப்பார்? நீ ஆதி கர்த்தா. ப்ரம்மனிலும் சிறந்தாய். அநந்தா, தேவேசா, வையத்தின் உறைவிடமே, நீ அழிவற்ற பொருள்; நீ ஸத்; நீ அஸத்; நீ அவற்றைக் கடந்த ப்ரம்மம். 37

त्वमादिदेवः पुरुषः पुराण-
स्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्तासि वेद्यं च परं च धाम
त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥

நீ ஆதி தேவன் தொல்லோன், நீ இந்த அகிலத்தின் பரம நிலயம். நீ அறிவோன், நீ அறிபடு பொருள். நீ பரமபதம். அநந்த ரூபா, நீ இவ்வுலகினுட் பரந்து கிடக்கிறாய். 38

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः
प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः
पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥

நீ வாயு, யமன், அக்நி, வருணன்; முப்பாட்டனாகிய பிரமன் நீ. உன்னை ஆயிர முறை கும்பிடுகிறேன். மீட்டு மீட்டும் உனக்கு "நமோ நம:" 39

नमः पुरस्तादथ पृष्ठतस्ते
नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं
सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

உன்னை முன் புறத்தே கும்பிடுகிறேன்; உன்னைப் பின் புறத்தே கும்பிடுகிறேன். எல்லாமாவாய், உன்னை எப்புறத்துங் கும்பிடுகிறேன். நீ எல்லையற்ற வீர்ய முடையாய், அளவற்ற வலிமை யுடையாய், ஸர்வத்திலும் நிறைந்திருக்கிறாய்; ஆதலால் நீ ஸர்வன். 40

सखेति मत्वा प्रसभं यदुक्तं
हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं
मया प्रमादात् प्रणयेन वापि ॥ ४१ ॥

இப்படிப்பட்ட நின் பெருமையை அறியாமல், நின்னை தோழனென்று கருதித் துடிப்புற்று, "ஏ கண்ணா, ஏ யாதவா, ஏ தோழா" என்று தவறுதலாலேனும் அன்பாலேனும் நான் சொல்லி யிருப்பதையும் 41

यच्चावहासार्थमसत्कृतोऽसि
विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं
तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

விளையாட்டிலும், படுக்கையிலும், இருப்பிலும், உணவிலும், தனியிடத்தேனும், அன்றி (மற்றவர் முன்னே யெனினும்), நான் உனக்கு வேடிக்கையாகச் செய்திருக்கும் அவமதிப்புகளையும்—அவற்றை யெல்லாம் பொறுக்கும்படி வேண்டுகிறேன், அளவற்றோய்! 42

पितासि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

சராசரமாகிய இவ்வுலகத்துக்கு நீ தந்தை யாவாய். இவ் வுலகத்தால் தொழத் தக்கனே; மிகவும் சிறந்த குரு நீ. உனக்கு நிகர் யாருமில்லை. எனில் உனக்கு மேல் வேறு யாவர்? மூன்று உலகங்களிலும் ஒப்பற்றபெருமையுடையவனே!

तस्मात् प्रणम्य प्रणिधाय कायं
प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः
प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४ ॥

ஆதலால், உடல் குனிய வணங்கி, நின்பால் அருள் கேட்கிறேன். ஈசா, வேண்டுதற் குரியாய், மகனைத் தந்தைபோலும், தோழனைத் தோழன் போலும், அன்பனை யன்பன் போலும் நீ என்னைப் பொறுத்தல் வேண்டும்.

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा
भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं
प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

இதற்கு முன் காணாததை இன்று கண்டு மகிழ்ச்சியுறுகிறேன்; எனினும், என் மனம் அச்சத்தால் சோர்கிறது. தேவா, எனக்கு நின் முன்னை வடிவத்தைக் காட்டுக தேவேசா, ஜகத்தின் நிலயமே, எனக்கருள் செய்க. 45

किरीटिनं गदिनं चक्रहस्त-
मिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन
सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

முன்போலவே, கிரீடமும் தண்டும் கையில் சக்கரமுமாக நின்னைக் காண விரும்புகிறேன். அகில மூர்த்தியே, ஆயிரத் தோளாய், முன்னை நாற்றோள் வடிவினை எய்துக. 46

श्रीभगवानुवाच—

मया प्रसन्नेन तवार्जुनेदं
रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं
यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

பகவான் சொல்லுகிறான் :—

அர்ஜுனா, யான் அருள் கொண்டு ஆத்ம யோகத்தால் எனது பர வடிவை நினக்குக் காண்பித்தேன். ஒளி மயமாய், அனந்தமாய், எல்லை யற்றதாய், ஆதியாகிய இவ்வடிவத்தை இதற்கு முன் உன்னைத் தவிர வேறு யாரும் பார்த்ததே கிடையாது. 47

न वेदयज्ञाध्ययनैर्न दानै-
र्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके
द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

வேதங்களாலும், வேள்வியாலும், கல்விகளாலும், தானங்களாலும், கிரியைகளாலேனும், மனித உலகத்தில் என்னை இவ் வடிவத்தில் உன்னை யன்றி வேறு யாராலும் பார்க்க முடியாது. குரு குலத்தில் சிறந்த வீரா! 48

मा ते व्यथा मा च विमूढभावो
दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं
तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

இப்படிப்பட்ட என் கோர வடிவத்தைக் கண்டு கலங்காதே; மயங்காதே. அச்சம் நீங்கி இன்புற்ற மனத்துடன் எனது முன்னை வடி 49
வத்தை நீ இதோ பார்!

सञ्जय उवाच—

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा
स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं
भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறான் :—

இங்ஙனம் வாஸுதேவன் அர்ஜுனனிடங் கூறி, மீட்டுக் தன் பழைய வடிவத்தைக் காட்டினான். அந்த மஹாத்மா மறுபடி தன் இனிய வடிவமெய்தி அச்ச முற்றிருந்த பார்த்தனை 50
ஆறுதல் கொள்ளச் செய்தான்.

**अर्जुन उवाच—**

**दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।**
**इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥५१॥**

அர்ஜுனன் சொல்லுகிறான்—

ஜனார்த்தனா, நினது தண்மை பொருந்திய இம் மானுட வடிவத்தைக் கண்டு இப்போது யான் அமைதி யுற்றேன். என் உணர்வு மீண்டது; இயற்கை நிலை யெய்தினேன். 51

**श्रीभगवानुवाच—**

**सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।**
**देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥५२॥**

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—

காண்பதற் கரிய என் வடிவத்தை இங்கு கண்டனை. தேவர்கள் கூட இவ் வடிவத்தைக் காண எப்போதும் விரும்பி நிற்கிறார்கள். 52

नाहं वेदैर्न तपसा
न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं
दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

என்னை நீ கண்டபடி, இவ்விதமாக, வேதங்களாலும், தவத்தாலும், தானத்தாலும், வேள்வியாலும் என்னைக் காணுதல் இயலாது. 53

भक्त्या त्वनन्यया शक्य
अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन
प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

பிறிதிடஞ் செல்லாத பக்தியால் மாத்திரமே என்னை இவ்விதமாக அறிதலும், உள்ளபடி காணுதலும், என்னுட் புகுதலும் இயலும். 54

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५ ॥

என் தொழில் செய்வான், எனைத் தலைக் கொண்டோன், என்னுடைய அடியான், பற்றெலாம் இற்றான், எவ்வுயிரிடத்தும் பகைமையிலாதான் யாவன், பாண்டவா, அவனென்னை எய்துவான். 55

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
विश्वरूपदर्शनयोगो नाम
एकादशोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் ப்ரம்ம வித்தையும் யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "விச்வரூப தர்சனயோகம்" என்ற பதினொன்றாம் அத்யாயம் முற்றிற்று.

# द्वादशोऽध्यायः

## பன்னிரண்டாம் அத்யாயம்.

### பக்தியோகம்

अर्जुन उवाच—

एवं सततयुक्ता ये
भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं
तेषां के योगवित्तमाः ॥ १ ॥

அர்ஜுனன் சொல்லுகிறன்:—

இங்ஙனம் எப்போதும் யோகத்தமர்ந்து நின்னை வழிபடும் தொண்டர்களா, அல்லது நாச மற்ற "அவ்யக்த" வஸ்துவை வழிபடுவோரா, இவ்விரு திறத்தாரில் யோக ஞானத்திலே மேம் பட்டார் யாவர்?

श्रीभगवानुवाच—

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

பகவான் சொல்லுகிறான்:—

என்னிடத்தே மனத்தைச் செலுத்தி நித்ய யோகிகளாய், உயர்ந்த நம்பிக்கையுடன் என்னை வழிபடுவோர் யாவர், அவர்களே யோகத்தில் சிறந்தோரென நான் கருதுகிறேன். 2

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥

இனி, அழிவற்றதும், குறிப்பற்றதும், அவ்யக்தமும் (தெளிவற்றதும்), எங்கும் நிறைந்ததும், கருதொணாததும், நிலையற்றதும், அசைவற்றதும், உறுதி கொண்டதுமாகிய பொருளை யாவர் வழிபடுகின்றனரோ, 3

**संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।**
**ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥**

இந்திரியக் குழாத்தை நன்கு கட்டுப்படுத்தி எங்கும் ஸமபுத்தி யுடையோராய், எல்லா உயிர்களுக்கும் நன்மை விரும்புவோ ராகிய அவர்களும் என்னையே அடைகிறார்கள். 4

**क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।**
**अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥**

ஆனால் 'அவ்யக்தத்தில்' மனம் நடு பட்டோர்க்குத் தொல்லை யதிகம், உடம்பெடுத்தோர் 'அவ்யக்த' நெறியெய்துதல் மிகவும் கஷ்டம். 5

**ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।**
**अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥**

எல்லாத் தொழில்களையும் எனக்கெனத் துறந்து, என்னைப் பரமாகக் கொண்டு, பிறழாத யோகத்தால் என்னை நினைத்து வழிபடுவோர் யாவர், 6

**तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।**
**भवामि न चिरात् पार्थ मय्यावेशितचेतसाम् ॥**

என் பால் அறிவைப் புகுத்திய அன்னோரை நான் மரண ஸம்ஸாரக் கடலினின்றும் விரைவில் தூக்கி விடுவேன். 7

**मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।**
**निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८॥**

மனதை என் பால் நிறுத்து; மதியை என்னுட் புகுத்து; இனி நீ என்னுளே உறைவாய்; ஐய மில்லை. 8

**अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।**
**अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९ ॥**

என்னிடம் ஸ்திரமாக நின் சித்தத்தைச் செலுத்த நின்னால் முடியாதென்றால், பழகிப் பழகி என்னை யடைய விரும்பு. 9

अभ्यासेऽप्यसमर्थोऽसि
मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि
कुर्वन् सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

பழகுவதிலும் நீ திறமை யற்றவனாயின், என் பொருட்டுத் தொழில் செய்வதை மேலாகக் கொண்டிரு. என் பொருட்டுத் தொழில்கள் செய்து கொண்டிருப்பதனாலும் ஸித்தி பெறு
வாய். 10

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

இதுவும் நின்னால் செய்யக் கூட வில்லை யென்றால், என்னுடன் லயித்திருப்பதை வழியாகக் கொண்டு, தன்னைத் தான் கட்டுப்படுத்தி, எல்லாச் செயல்களின் பயன்களையுந் துறந்து
விடு. 11

श्रेयो हि ज्ञानमभ्यासा-
ज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात् कर्मफलत्याग-
स्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥

பழக்கத்தைக் காட்டிலும் ஞானம் சிறந்தது, ஞானத்தைக் காட்டிலும் தியானம் சிறந்தது. தியானத்தைக் காட்டிலும் செய்கைப் பயன்களைத் துறந்து விடுதல் மேம்பட்டது. அத் துறவைக் காட்டிலும் சாந்தி உயர்ந்தது. 12

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

எவ்வுயிரையும் பகைத்தலின்றி, அவற்றிடம் நட்பும் கருணையும் உடையவனாய், யானென்பதும் எனதென்பதும் நீங்கி, இன்பத்தையும் துன்பத்தையும் நிகராகக் கொண்டு பொறுமை யுடையவனாய், 13

सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मे भक्तः स मे प्रियः ॥ १४

எப்போதும் மகிழ்ச்சி யுடையவனாய், தன்னைக் கட்டியவனாய், திட நிச்சய முடையவனாய், என்னிடத்தே மனத்தையும் மதியையும் அர்ப்பணஞ் செய்து என் தொண்டனாகிய யோகி எனக்கினியவன். 14

यस्मान्नोद्विजते लोको
लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगै-
र्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

எவனை உலகத்தார் வெறுப்பதில்லையோ, உலகத்தாரை எவன் வெறுப்பதில்லையோ, களியாலும் அச்சத்தாலும் சினத்தாலும் வினையும் கொதிப்புகளினின்றும் எவன் விடுபட்டானோ, அவனே எனக்கினியவன். 15

अनपेक्षः शुचिर्दक्ष
उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी
यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

எதனையும் எதிர்பார்த்தலின்றித் தூயோனாய், திறமுடையோனாய்ப் பற்றுதலற்றவனாய், கவலை நீங்கியவனாய், எல்லா ஆரம்பங்களையுந் துறந்து என்னிடம் பக்தி செய்வோனே எனக் கினியவன். 16

यो न हृष्यति न द्वेष्टि
न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी
भक्तिमान् यः स मे प्रियः ॥ १७ ॥

களித்தலும், பகைத்தலும், துயர்ப்படுதலும், அவாவுறுதலும் இன்றி நன்மையையுந் தீமையையுந் துறந்த தொண்டனே எனக்கினியவன். 17

समः शत्रौ च मित्रे च
तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु
समः सङ्गविवर्जितः ॥ १८ ॥

பகைவனிடத்தும், நண்பனிடத்தும், மானத்திலும், அவமானத்திலும், குளிரிலும், வெப்பத்திலும், இன்பத்திலும், துன்பத்திலும் ஸமப்பட்டான் பற்றுவிட்டான். 18

तुल्यनिन्दास्तुतिर्मौनी
सन्तुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमति-
र्भक्तिमान् मे प्रियो नरः ॥ १९ ॥

புகழையும் இகழையும் நிகராகக் கொண்ட மௌனி, யாது வரினும் அதில் மகிழ்ச்சி யுறுவான், குறியற்றான், ஸ்திர புத்தியுடையான், இத்தகைய பக்தன் எனக்கினியவன். 19

ये तु धर्म्यामृतमिदं
यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना मत्परमा
भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

இந்தத் தர்மரூபமான அமிர்தத்தை யான்
சொல்லியபடி வழிபடுவோர், நம்பிக்கை யுடை-
யோர், என்னை முதலாகக் கொண்டோர், அத்
தகைய பக்தர் எனக்கு மிகவு மினியர். 20

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
भक्तियोगो नाम
द्वादशोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் ப்ரம்மவித்தையும்
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீகிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "பக்தியோகம்" என்ற
பன்னிரண்டாம் அத்யாயம்
முற்றிற்று.

# त्रयोदशोऽध्यायः

## பதின்மூன்றும் அத்யாயம்.

## க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞ விபாகம்.

अर्जुन उवाच—

**प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।**
**एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥ १ ॥**

அர்ஜுனன் சொல்லுகிறன்—

* ப்ரக்ருதி, புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன், ஞானம், ஞேயம் என்னு மிவற்றை அறிய விரும்புகிறேன். 1

---

* க்ஷேத்ரம், இடம்; க்ஷேத்ரக்ஞன் - இடத்தை அறிவோன்.

ப்ரக்ருதி - இயற்கை; புருஷன் - ஆத்மா.

ஞானம் - அறிவு; ஞேயம் - அறியப்படு பொருள்.

श्रीभगवानुवाच—

इदं शरीरं कौन्तेय
क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः
क्षेत्रज्ञ इति तद्विदः ॥ २ ॥

பகவான் சொல்லுகிறான்—

குந்தி மகனே, இந்த உடம்பு க்ஷேத்ர மென்று சொல்லப்படுகிறது. இதனை அறிந்து நிற்போனை க்ஷேத்ரக்ஞனென்று ப்ரம்ம ஞானிகள் சொல்லுகிறார்கள். 2

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ ३ ॥

பாரதா, எல்லா க்ஷேத்ரங்களிலும் க்ஷேத்ரக்ஞன் நானே யென்றுணர். க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும் எவை யென்றறியுஞ் ஞானமே உண்மையான ஞான மென்பது என் கொள்கை,

तत्क्षेत्रं यच्च यादृक् च
यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च
तत् समासेन मे शृणु ॥ ४ ॥

அந்த க்ஷேத்ரமென்பது யாது? எவ்வகைப் பட்டது? என்ன மாறுதல்களுடையது? எங்கிருந்து வந்தது? க்ஷேத்ரக்ஞன் யார்? அவன் பெருமை எப்படிப்பட்டது? இவற்றை நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன், கேள். 4

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ५ ॥

அது (க்ஷேத்ரம்) ரிஷிகளால் பல வகைகளிலே பல வேறு சந்தங்களில் பாடப்பட்டது. காரணம் நிறைந்தனவும், நல்ல நிச்சய முடையனவுமாகிய பிரம்ம ஸூத்ர பதங்களில் இசைக்கப் பட்டது. 5

महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ६ ॥

மஹா பூதங்கள், அஹங்காரம், புத்தி, அவ்யக்தம், பதினோ ரிந்திரியங்கள், இந்திரிய நிலங்கள் ஐந்து, 6

इच्छा द्वेषः सुखं दुःखं सङ्घातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ७ ॥

வேட்கை, பகைமை, இன்பம், துன்பம், உடம்பு, உணர்வு, உள்ளத்துறுதி—இவையே க்ஷேத்ரமும் அதன் வேறுபாடுகளுமாம் என உனக்குச் சுருக்கிக் காட்டினேன். 7

अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ८॥

கர்வ மின்மை, டம்ப மின்மை, துன்புறுத்தாமை... 

ஹிம்ஸை செய்யாமை, பொறுமை, நேர்மை, ஆசார்யனை வழிபடுதல், தூய்மை, ஸ்திரத்தன்மை, தன்னைக் கட்டுதல், 8

इन्द्रियार्थेषु वैराग्य-
मनहङ्कार एव च ।
जन्ममृत्युजराव्याधि-
दुःखदोषानुदर्शनम् ॥ ९ ॥

இந்திரிய விஷயங்களில் விருப்ப மின்மை, அஹங்கார மில்லாமை, பிறப்பு இறப்பு நரை நோய் துக்கம் தோஷம் இவற்றின்கண் இசைந்த காட்சி யுடைமை, 9

असक्तिरनभिष्वङ्गः
पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्व-
मिष्टानिष्टोपपत्तिषु ॥ १० ॥

பற்றின்மை, மகனையும் மனைவியையும் வீட்டையும் தன்னுடைமை யெனக் கருதாமை, விரும்பியனவும் விரும்பாதனவும் எய்து மிடத்தே ஸமசித்த முடைமை, 10

मयि चानन्ययोगेन
भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्व-
मरतिर्जनसंसदि ॥ ११ ॥

பிறழ்ச்சி யற்ற யோகத்துடன் என்னிடம் தவறுதலின்றிச் செலுத்தப்படும் பக்தி, தனி யிடங்களை மேவுதல், ஜனக்கூட்டத்தில் விருப்ப மின்மை, 11

अध्यात्मज्ञाननित्यत्वं
तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्त-
मज्ञानं यदतोऽन्यथा ॥ १२ ॥

ஆத்ம ஞானத்தில் எப்போதும் நழுவாமை, தத்வ ஞானத்தில் பொருளுணர்வு—இவை ஞான மெனப்படும். இவற்றினின்றும் வேறு பட்டது அஞ்ஞானம். 12

**ज्ञेयं यत्तत् प्रवक्ष्यामि**
**यज्ज्ञात्वामृतमश्नुते ।**
**अनादिमत्परं ब्रह्म**
**न सत्तन्नासदुच्यते ॥ १३ ॥**

ஞேயம் எது வென்பதைச் சொல்லுகிறேன். அதை அறிந்தால் நீ சாகாமல் இருப்பாய். அநாதியாகிய பரப்ரம்மம், அதை 'ஸத்' என்பது மில்லை, 'அஸத்' என்பது மில்லை. 13

**सर्वतः पाणिपादं तत्**
**सर्वतोऽक्षिशिरोमुखम् ।**
**सर्वतः श्रुतिमल्लोके**
**सर्वमावृत्य तिष्ठति ॥ १४ ॥**

அது எங்கும் கைகால்களுடையது; எங்கும் கண்ணும் தலையும் வாயு முடையது; எங்கும் செவியுடையது; உலகத்தில் எதனையும் சூழ்ந்து நிற்பது; 14

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १५॥

எல்லா இந்திரிய குணங்களும் வாய்ந் தொளிர்வது; எல்லா இந்திரியங்களுக்கும் புறம்பானது; பற்றில்லாதது; அனைத்தையும் பொறுப்பது; குணமற்றது; குணங்களைத் துய்ப்பது; 15

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥१६

பூதங்களுக்கு உள்ளும் புறமுமாவது; அசரமும் சரமுமாவது; நுண்மையால் அறிவரியது; தூரமானது; அருகிலிருப்பது; 16

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥१७॥

உயிர்களில் பிரிவுபட்டு நில்லாமல் பிரிவுபட்டது போல் நிற்பது. அதுவே பூதங்களைத் தாங்குவது என்றறி; அவற்றை உண்பது, பிறப்பிப்பது. 17

**ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।**
**ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्यनिष्ठितम् ॥ १८॥**

ஒளிகளுக்கெல்லாம் அஃதொளி; இருளிலும் உயர்ந்த தென்ப. அதுவே ஞானம்; ஞேயம்; ஞானத்தால் எய்தப்படு பொருள்; எல்லாவற் றின் அகத்திலும் அமர்ந்தது. 18

**इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।**
**मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १९ ॥**

இங்ஙனம் க்ஷேத்ரம், ஞானம், ஞேயம் என்ப வற்றைச் சுருக்கமாகச் சொன்னேன். என் பக் தன் இதை யறிந்து எனது தன்மையை அடை கிறான். 19

**प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।**
**विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसम्भवान् ॥२०**

ப்ரக்ருதி, புருஷன் இவ்விரண்டும் அநாதி யென்றுணர். வேறுபாடுகளும் குணங்களும் ப்ர க்ருதியிலே பிறப்பன வென்றுணர். 20

**कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।**
**पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २१ ॥**

கார்ய காரணங்களை ஆக்கும் ஹேது ப்ரக்ருதி யென்பர். ஸுக துக்கங்களை உணரும் ஹேது புருஷ னென்பர். 21

**पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।**
**कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २२ ॥**

புருஷன் ப்ரக்ருதியில் நின்றுகொண்டு, ப்ரக்ருதியினிடம் பிறக்கும் குணங்களைத் துய்க்கிறான். குணங்களினிடம் இவனுக்குள்ள பற்றுதலே இவன் நல்லனவும் தீயனவுமாகிய ஜன்மங்களில் பிறப்பதற்குக் காரணமாகிறது. 22

**उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।**
**परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २३**

மேற் பார்ப்போன், அநுமதி தருவோன், சுமப்பான், உண்பான், மஹேசுரன்—இங்ஙனம் உடம்பிலுள்ள பரம புருஷன் பரமாத்மா வென்றே சொல்லப்படுகிறான். 23

**य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।**
**सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥२४**

இங்ஙனம் புருஷனையும், ப்ரக்ருதியையும், அதன் குணங்களையு மறிந்தோன் எல்லா நெறிகளிலும் இயங்குவா னெனினும், அவனுக்கு மறு பிறப்பில்லை. 24

**ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।**
**अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २५ ॥**

சிலர் ஆத்மாவில் ஆத்மாவால் ஆத்மாவை அறிகிறார்கள்; பிறர் ஸாங்க்ய யோகத்தால் அறிகிறார்கள்; பிறர் கர்மயோகத்தால். 25

**अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।**
**तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २६**

இங்ஙன மறியாத மற்றைப் பிறர் அன்னியரிடமிருந்து பெற்ற சுருதிகளை வழிபடுகிறார்கள். அவர்களும் அந்த சுருதிகளின்படி ஒழுகுவாராயின் மரணத்தை வெல்வார். 26

यावत् सञ्जायते किञ्चित्
सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्
तद्विद्धि भरतर्षभ ॥ २७ ॥

பாரதக் காளையே, ஸ்தாவரமாயினும் ஜங்கமமாயினும் ஒருயிர் பிறக்குமாயின், அது க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும் சேர்ந்தமையால் பிறந்ததென்றறி. 27

समं सर्वेषु भूतेषु
तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यन्तं
यः पश्यति स पश्यति ॥ २८ ॥

எல்லா பூதங்களிலும் ஸமமாக நிற்போன் பரமேசுவரன். அழிவனவற்றில் அவன் அழியான். அவனைக் காண்போனே காட்சியுடையான். 28

**समं पश्यन् हि सर्वत्र**
**समवस्थितमीश्वरम् ।**
**न हिनस्त्यात्मनात्मानं**
**ततो याति परां गतिम् ॥ २९ ॥**

எங்கும் ஸமானமாக ஈசன் நிற்பது காண்பான், தன்னைத் தான் துன்பப் படுத்திக்கொள்ள மாட்டான். அதனால் பரகதி அடைகிறான். 29

**प्रकृत्यैव च कर्माणि**
**क्रियमाणानि सर्वशः ।**
**यः पश्यति तथात्मान-**
**मकर्तारं स पश्यति ॥ ३० ॥**

எங்கும் தொழில்கள் இயற்கையாலேயே செய்யப்படுகின்றன. ஆதலால் தான் கர்த்தா இல்லை யென்று காண்பானே காட்சி யுடையான். 30

यदा भूतपृथग्भाव-
मेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं
ब्रह्म सम्पद्यते तदा ॥ ३१ ॥

பல வகைப்பட்ட பூதங்கள் ஒரே ஆதார முடையன என்பதை அறிவானாயின், அப் போது, அதினின்றும் விஸ்தாரமான ப்ரம்மத்தை அடைகிறான். 31

अनादित्वान्निर्गुणत्वात्
परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय
न करोति न लिप्यते ॥ ३२ ॥

ஆதி யின்மையால், குண மின்மையால், இந் தப் பரமாத்மா கேடற்றான். இவன் உடம்பி லிருந்தாலும் செயலற்றான்; பற்றற்றான். 32

यथा सर्वगतं सौक्ष्म्या-
दाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे
तथात्मा नोपलिप्यते ॥ ३३ ॥

எங்கு மிருந்தாலும் ஆகாசம் தன் நுண்மை யால் பற்றற்று நிற்பது போல், உடம்பில் ஆத்மா எங்கணு மிருந்தாலும் பற்றுறுவ தில்லை. 33

यथा प्रकाशयत्येकः
कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं
प्रकाशयति भारत ॥ ३४ ॥

ஸூர்யன் ஒருவனாய், இவ்வுலக முழுதையும் எங்ஙனம் ஒளியுறச் செய்கிறானோ, அதுபோல் க்ஷேத்ரத்தை யுடையோன் க்ஷேத்ர முழுதையும் ஒளியுறச் செய்கிறான். 34

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३५॥

ஞானக் கண்ணால் இவ்வாறு க்ஷேத்ரத்துக்கும் க்ஷேத்ரக்ஞனுக்கு முள்ள வேற்றுமையை அறிவோர் பூத ப்ரக்ருதியினின்றும் விடுதலை பெற்றுப் பரம் பொருளை அடைகின்றனர். 35

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
क्षेत्रक्षेत्रज्ञविभागो
नाम त्रयोदशोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும், ப்ரம்ம வித்தையும்
யோக சாஸ்த்ரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ
விபாகம்" என்ற பதின்மூன்றும்
அத்யாயம் முற்றிற்று.

# चतुर्दशोऽध्यायः

## பதினான்காம் அத்யாயம்.

### மூன்று குணப் பாகுபாடு.

श्रीभगवानुवाच—

परं भूयः प्रवक्ष्यामि
ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयः सर्वे
परां सिद्धिमितो गताः ॥ १ ॥

பகவான் சொல்லுகிறான்:—

*ஞானங்களனைத்திலும் மேலான பரம ஞானத்தை உனக்கு மீட்டு மொழிகிறேன். அதை யறிந்து முனிவரெல்லாரும் இவ்வுலகத்திலேயே ஈடேற்றம் பெற்றிருக்கிறார்கள்.*

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥२॥

இந்த ஞானத்தை யடைந்து அதனால் என்
னியல்பு பெற்றோர் படைப்புக் காலத்தில் பிற
வார். ஊழியிலும் சாகமாட்டார். 2

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् ।
सम्भवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

பெரிய பரப்ரம்மமே எனக்காதாரம் ; அதில்
நான் கருத்தரிக்கிறேன். பாரதா, எல்லா உயிர்
களும் அதிலே தான் பிறக்கின்றன. 3

सर्वयोनिषु कौन्तेय मूर्तयः सम्भवन्ति याः ।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

எல்லாக் கருக்களிலும் பிறக்கும் வடிவங்க
ளனைத்திற்கும் ப்ரம்மமே பெரிய காரணம். நான்
விதை தரும் பிதா. 4

**सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसम्भवाः ।**
**निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥**

ஸத்வம், ரஜஸ், தமஸ்—இந்த குணங்கள் ப்ரக்ருதியில் எழுவன. பெருந்தோளாய், இவை உடம்பில் அழிவற்ற ஆத்மாவைப் பிணிக்கின்றன.

**तत्र सत्त्वं निर्मलत्वात् प्रकाशकमनामयम् ।**
**सुखसंगेन बध्नाति ज्ञानसंगेन चानघ ॥ ६ ॥**

அவற்றுள்ளே ஸத்வம் நிர்மலத் தன்மையால் ஒளிகொண்டது; நோவற்றது. பாவமற்றோய், அது இன்பச் சேர்க்கையாலும் ஞானச் சேர்க்கையாலும் கட்டுப்படுத்துவது. 6

**रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।**
**तन्निबध्नाति कौन्तेय कर्मसंगेन देहिनम् ॥ ७ ॥**

ரஜோகுணம் விருப்ப இயல்புடையது; அவாவின் சேர்க்கையால் பிறப்பது. குந்தி மகனே, அது ஆத்மாவைத் தொழிற் சேர்க்கையால் கட்டுகிறது. 7

तमस्त्वज्ञानजं विद्धि
मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभि-
स्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

தமோகுணம் அஞ்ஞானத்தில் பிறப்பதென்றுணர். (இதுவே) எல்லா ஜீவர்களையும் மயங்கச் செய்வது. தவறுதலாலும், சோம்பராலும், உறக்கத்தாலும் அது கட்டுப் படுத்துகிறது, பாரதா! 8

सत्त्वं सुखे सञ्जयति
रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः
प्रमादे सञ्जयत्युत ॥ ९ ॥

ஸத்வம் இன்பத்திலே பற்றுதல் விளைவிக்கிறது. பாரதா, ரஜோ குணம் செய்கையில் பற்றுறுத்துகிறது. தமோ குணம் ஞானத்தைச் சூழ்ந்து (ஜீவனை) மயக்கத்தில் பிணிக்கிறது. 9

रजस्तमश्चाभिभूय
सत्त्वं भवति भारत ।
रजः सत्त्वं तमश्चैव
तमः सत्त्वं रजस्तथा ॥ १० ॥

பாரதா, (சில வேளை) ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் அடக்கி ஸத்வம் இயல்கிறது. (சில வேளை) ஸத்வத்தையும் தமோ குணத்தையும் அடக்கி ரஜோ குணம் நிற்கிறது. அங்ஙனமே, ஸத்வத்தையும் ரஜோ குணத்தையும் அடக்கித் தமஸ் மிஞ்சுகிறது. 10

सर्वद्वारेषु देहेऽस्मिन्
प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्या-
द्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥

இந்த உடம்பில் எல்லா வாயில்களிலும் ஞான ஒளி பிறக்குமாயின், அப்போது ஸத்வ குணம் வளர்ச்சி பெற்றதென்றறியக் கடவாய். 11

**लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।**
**रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥**

அவா, முயற்சி, தொழி லெடுப்பு, அமைதி யின்மை, விருப்பம், இவை ரஜோகுணம் மிகுதிப் படுவதிலிருந்து தோன்றுகின்றன, பாரதர் காளையே! 12

**अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।**
**तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३ ॥**

ஒளியின்மை, முயற்சியின்மை, தவறுதல், மயக்கம், இவை தமோகுணம் ஓங்குமிடத்தே பிறப்பன, குருகுலச் செல்வமே; 13

**यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।**
**तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४ ॥**

ஸத்வம் ஓங்கி நிற்கையிலே சரீரி இறப்பானா யின், மாசற்றன வாகிய உத்தம ஞானிகளின் உலகங்களை அடைகிறான். 14

**रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।**
**तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥**

ரஜோகுணத்தில் இறப்போன் கர்மப் பற்றுடையோரிடையே பிறக்கிறான். அவ்வாறே, தமஸில் இறப்போன் மூட கர்ப்பங்களில் தோன்றுகிறான். 15

**कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।**
**रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६ ॥**

ஸத்வ இயல்புடைய நிர்மலத் தன்மையே நற்செய்கையின் பயனென்பர். ரஜோகுணத்தின் பயன் துன்பம், தமோகுணத்தின் பயன் அறிவின்மை. 16

**सत्त्वात् सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।**
**प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥**

ஸத்வத்திலிருந்து ஞானம் பிறக்கிறது; ரஜோ குணத்தினின்றும் அவா; தமோ குணத்திலிருந்து தவறுதலும், மயக்கமும், அஞ்ஞானமும் தோன்றுகின்றன. 17

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था
मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्था
अधो गच्छन्ति तामसाः ॥ १८ ॥

ஸத்வகுணத்தில் நிற்போர் மேலேறுகிறார்கள். ரஜோ குணமுடையோர் இடையே நிற்கின்றார்கள். தாமஸர் மிகவும் இழிய குணங்களும் செயல்களுமுடையோ ராய்க் கீழே செல்வர். 18

नान्यं गुणेभ्यः कर्तारं
यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति
मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

குணங்களைத் தவிர வேறு கர்த்தா இல்லையென்பதைக் கண்டு குணங்களுக்கு மேலுள்ள பொருளையும் ஜீவன் அறிவானுயின் என் இயல்பை அறிவான். 19

गुणानेतानतीत्य त्रीन् देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

உடம்பிலே பிறக்கும் இந்த மூன்று குணங்களையுங் கடந்து, பிறப்பு, சாவு, மூப்பு, வருத்தம் என்பனவற்றினின்றும் விடுபட்டோன் அமிர்தநிலை யடைகிறான். 20

अर्जुन उवाच—

कैर्लिङ्गैस्त्रीन्गुणानेता-
नतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतां-
स्त्रीन् गुणानतिवर्तते ॥ २१ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான் :—

இறைவனே, மூன்று குணங்களையுங் கடந்தோன் என்ன அடையாளங்களுடையவன்? எங்ஙனம் ஒழுகுவான்? இந்த மூன்று குணங்களையும் அவன் எங்ஙனம் கடக்கிறான்? 21

श्रीभगवानुवाच—

प्रकाशं च प्रवृत्तिं च
मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि सम्प्रवृत्तानि
न निवृत्तानि काङ्क्षति ॥ २२ ॥

கடவுள் சொல்லுகிறான் :—

ஒளி, தொழில், மயக்கம்—இவை தோன்றும் போது இவற்றைப் பகைத்திடான்; நீங்கிய போது இவற்றை விரும்பான்; 22

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥ २३ ॥

புறக்கணித்தான் போலே யிருப்பான், குணங்களால் சலிப்படையான், "குணங்கள் சுழல்கின்றன" என்றெண்ணி அசைவற்று நிற்பான்; 23

समदुःखसुखः स्वस्थः
समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीर-
स्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४ ॥

துன்பத்தையும் இன்பத்தையும் நிகராகக் கொண்டோன், தன்னிலையில் நிற்பான், ஓட்டையும் கல்லையும் பொன்னையும் நிகராகக் காண்பான், இனியவரிடத்தும் இன்னாதாரிடத்தும் ஸமானமாக நடக்குந் தீரன், இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் நிகராகக் கணிப்பான், 24

मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥२५॥

மானத்தையும் அவமானத்தையும் நிகராகக் கருதுவான், நண்பரிடத்தும் பகைவரிடத்தும் ஒரு நிலைமை பூண்டான், எல்லா விதத் தொழிலெடுப்புக்களையுந் துறந்தான்—அவனே குணங்களைக் கடந்தவனென்று சொல்லப்படுகிறான். 25

मां च योऽव्यभिचारेण
भक्तियोगेन सेवते ।
स गुणान् समतीत्यैतान्
ब्रह्मभूयाय कल्पते ॥ २६ ॥

வேறுபாடில்லாத பக்தி யோகத்தால் என்னை வழிபடுவோனும் குணங்களைக் கடந்து ப்ரம்மத் தன்மை பெறத் தகுவான். 26

ब्रह्मणो हि प्रतिष्ठाह-
ममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य
सुखस्यैकान्तिकस्य च ॥ २७ ॥

சாவும் கேடு மற்ற ப்ரம்மத்துக்கு நானே நிலைக்களன், என்றும் இயலும் அறத்துக்கும் தனிமை யின்பத்துக்கும் நானே இடம். 27

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे 'गुणत्रयविभागयोगो' नाम चतुर्दशोऽध्यायः ।**

இங்ஙனம் உபநிஷத்தும், ப்ரம்ம வித்தையும், யோக சாஸ்த்ரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "மூன்று குணங்களின் பாகு பாடு" என்ற பதினான்காம் அத்யாயம் முற்றிற்று.

# पंचदशोऽध्यायः

## பதினைந்தாம் அத்யாயம்

### புருஷோத்தம யோகம்.

श्रीभगवानुवाच—

ऊर्ध्वमूलमधः शाख-
मश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि
यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

பகவான் சொல்லுகிறன்:—

* அவ்யக்தம் மேலே வேர்களும் கீழே கிளைகளு முடையதோர் அரச மரத்தைப் போன்றதெனன்பர். அதன் இலைகளே வேதங்கள்; அதை அறிவோனே வேத மறிவோன். 1

---

* அவ்யக்தம் - ஜகத்தின் தெளிவுபடாத உள் நிலை.

**अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा**
**गुणप्रवृद्धा विषयप्रवालाः ।**
**अधश्च मूलान्यनुसन्ततानि**
**कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २ ॥**

அதன் கிளைகள் குணங்களால் ஓங்கி விஷயத்
தளிர்களுடன் கீழு மேலும் பரந்து கிடக்
கின்றன. அதன் வேர்கள் கீழ் நோக்கிப் பல்கி
மனித உலகத்தில் கர்மத் தொடுப்புக்களா
கின்றன. 2

**न रूपमस्येह तथोपलभ्यते**
**नान्तो न चादिर्न च सम्प्रतिष्ठा ।**
**अश्वत्थमेनं सुविरूढमूल-**
**मसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३ ॥**

ஆதலால் இவ்வுலகத்தில் இதற்கு வடிவங்
காணப்படுவதில்லை; முடிவும், ஆதியும், நிலைக்
களனும் புலப்படுவதில்லை. நன்கு ஊன்றிய வேரு
டைய இந்த அரச மரத்தைப் பற்றின்மை யென்
னும் வலிய வாளால் வெட்டி யெறிந்து விட்டு, 3

ततः पदं तत्परिमार्गितव्यम्
यस्मिन् गता न निवर्तन्ति भूयः।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये
यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४ ॥

அப்பால், ஒருவன் புகுந்தோர் மீள்வதற்ற பதவியைப் பெறலாம். (அப் பதமுடையோனாகிய) எவனிடமிருந்து ஆதித் தொழில் பொழிவுற்றதோ, அந்த ஆதி புருஷனைச் சார்ந்து நிற்கிறேன். 4

निर्मानमोहा जितसङ्गदोषा
अध्यात्मनित्या विनिवृत्तकामाः।
द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञै-
र्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५ ॥

செருக்கும் மயக்கமு மற்றோர், சார்புக் குற்றங்களை யெல்லாம் வென்றோர், ஆத்ம ஞானத்தில் எப்போதும் நிற்போர், விருப்பங்களினின்றும் நீங்கியோர், ஸுக துக்கக் குறிப்புக்களையுடைய இரட்டைகளினின்று விடுபட்டோர், மடமை யற்றோர்—இன்னோர் அந்த நாச மற்ற பதத்தை எய்துகின்றனர். 5

**न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ ६ ॥**

அதற்கு ஸூர்யனும் சந்திரனும் தீயும் ஒளி யேற்றுவதில்லை. எதனை யெய்தினோர் மீள்வதில்லையோ, அதுவே என் பரமபதம். 6

**ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥**

எனது அம்சமே ஜீவ லோகத்தில் என்று முள்ள ஜீவனாகி, இயற்கையி லுள்ளன வாகிய மன முட்பட்ட ஆறு இந்திரியங்களையும் கவர்கிறது. 7

**शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८ ॥**

கந்தங்களைக் காற்றுத் தோய்வினால் பற்றிச் செல்வதுபோல், ஈசுவரன், யாதேனுமோர் உடலை எய்துங் காலத்தும் விடுங் காலத்தும், இந்த இந்திரியங்களைப் பற்றிச் செல்லுகிறான். 8

**श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।**
**अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥**

கேட்டல், காண்டல், தீண்டுதல், சுவை, மோப்பு, மனம்—இவற்றில் நிலைகொண்டு ஜீவன் விஷயங்களைத் தொடர்ந்து நடக்கிறான். 9

**उत्क्रामन्तं स्थितं वापि भुञ्जानं वा गुणान्वितम् ।**
**विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥१०**

அவன் புறப்படுகையிலும், நிற்கையிலும், உண்ணுகையிலும், குணங்களைச் சார்ந்திருக்கையிலும், அவனை மூடர் காண்பதில்லை. ஞான விழியுடையோர் காண்கின்றனர். 10

**यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।**
**यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥११॥**

முயற்சி யுடைய யோகிகள் இவனைத் தம் முள்ளேயே காண்கின்றனர். முயற்சியுடையோராயினும் தம்மைத் தாம் சமைக்காத அஞ்ஞானிகள் இவனைக் காண்கிலர். 11

यदादित्यगतं तेजो
जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ
तत्तेजो विद्धि मामकम् ॥ १२ ॥

ஸூர்யனிடமிருந்து உலக முழுமைக்கும் சுடர் கொளுத்தும் ஒளியும், சந்திரனிடத்துள்ளதும், தீயிலுள்ளதும்—அவ்வொளி யெல்லாம் என்னுடையதே யென்றுணர். 12

गामाविश्य च भूतानि
धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीः सर्वाः
सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥

நான் பூமியுட் புகுந்து உயிர்களை வீர்யத்தால் தாங்குகிறேன்; ரஸ வடிவமுள்ள ஸோமமாகிப் பூண்டுகளை யெல்லாம் வளர்க்கிறேன். 13

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥१४

நானே *வைசுவாநரனாய், உயிர்களின் உடல் களைச் சார்ந்திருக்கிறேன். பிராணன் அபா னன் என்ற வாயுக்களுடன் கூட நால் வகைப் பட்ட அன்னத்தை ஜீர்ண மாக்குகிறேன். 14

सर्वस्य चाहं हृदि सन्निविष्टो
मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो
वेदान्तकृद्वेदविदेव चाहम् ॥ १५ ॥

எல்லாருடைய அகத்திலும் நான் புகுந்திருக் கிறேன். நினைவும், ஞானமும், இவற்றின் நீக்க மும்—என்னிடமிருந்து பிறக்கின்றன. எல்லா வேதங்களிலும் அறியப்படும் பொருள் யான்; வேதாந்தத்தை ஆக்கியோன் யான்; வேத முணர்ந்தோன் யானே. 15

* வைசுவாநரன் - எல்லா நரரிடத்து முள்ள கடவுள்.

**द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।**
**क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥१६**

உலகத்தில் இரண்டு வகைப் புருஷருளர், * அக்ஷர புருஷன் க்ஷர புருஷன் என. க்ஷர புருஷன் என்பது எல்லா உயிர்களையுங் குறிக்கும்; கூடஸ்தனே அக்ஷர புருஷன். 16

**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।**
**यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥**

இவரில் வேறுபட்டோன் உத்தம புருஷன். அவனே பரமாத்மா எனப்படுவோன். அவன் மூன்று உலகுகளினுட் புகுந்து அவற்றைத் தரிக்கிறான்; கேடற்ற ஈசுவரன். 17

---

* க்ஷரம் - அழிவது; அக்ஷரம் - அழியாதது; கூடஸ்தன் - சிகரத்தி லுள்ளோன், மாறுதலற்றோன்.

यस्मात्क्षरमतीतोऽह-
मक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च
प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥

நான் அழிவு கடந்தோனாதலாலும், அக்ஷர புருஷனைக் காட்டினும் சிறந்தோனாதலாலும், உலகத்தாராலும் வேதங்களாலும் புருஷோத்தமனென்று கூறப்படுகிறேன். 18

यो मामेवमसम्मूढो
जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां
सर्वभावेन भारत ॥ १९ ॥

மடமை தீர்ந்தவனாய், எவன் யானே புருஷோத்தமனென்பதை அறிவானோ, அவனே எல்லாமறிந்தோன், அவன் என்னை எல்லாத் தன்மையாலும் வழிபடுகிறான். 19

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ ।
एतद्बुद्ध्वा बुद्धिमान् स्यात् कृतकृत्यश्च भारत ॥

குற்ற மற்றோய், இங்ஙனம் மிகவும் ரஹஸ்யமான இந்த சாஸ்த்ரத்தை உனக்கு உரைத்தேன். பாரதா, இதை யுணர்ந்தோன் புத்திமானுவான்; அவனே செய்யத்தக்கது செய்தான். 20

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
पुरुषोत्तमयोगो नाम
पञ्चदशोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும் ப்ரம்மவித்தையும்
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் 'புருஷோத்தம யோகம்'
என்ற பதினைந்தாம் அத்யாயம்
முற்றிற்று.

# षोडशोऽध्यायः

## பதினாறும் அத்யாயம்.

### தேவ ஸம்பத்தும், அஸுர ஸம்பத்தும்.

श्रीभगवानुवाच—

अभयं सत्त्वसंशुद्धि-
ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च
स्वाध्यायस्तप आर्जवम् ॥ १ ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறன்—

அஞ்சாமை, உள்ளத் தூய்மை, ஞான யோகத்தில் உறுதி, ஈகை, தன்னடக்கம், வேள்வி, வேதங்கற்றல், தவம், நேர்மை, 1

अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २ ॥

கொல்லாமை, வாய்மை, சினவாமை, துறவு, அமைதல், வண்மை, ஜீவதயை, அவாவின்மை, மென்மை, நாணுடைமை, சலியாமை, 2

तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवन्ति सम्पदं दैवीमभिजातस्य भारत ॥ ३ ॥

ஒளி, பொறை, உறுதி, சுத்தம், துரோக மின்மை,—இவை தைவ ஸம்பத்தை எய்தியவ னிடம் ஏற்படுகின்றன, பாரதா! 3

दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ सम्पदमासुरीम् ॥४

டம்பம், இறுமாப்பு, கர்வம், சினம், கடுமை, அஞ்ஞானம்—இவை அஸுர ஸம்பத்தை எய்தி யவனிடம் காணப்படுகின்றன; பார்த்தா! 4

दैवी सम्पद्विमोक्षाय
निबन्धायासुरी मता ।
मा शुचः सम्पदं दैवी-
मभिजातोऽसि पाण्डव ॥ ५ ॥

தேவ ஸம்பத்தால் விடுதலை யுண்டாம். அஸுர ஸம்பத்தால் பந்த மேற்படும். பாண்டவா, தேவ ஸம்பத்தை எய்தி விட்டாய்; துயரப் படாதே. 5

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन्
दैव आसुर एव च ॥
दैवो विस्तरशः प्रोक्त
आसुरं पार्थ मे शृणु ॥ ६ ॥

இவ்வுலகத்தில் உயிர்ப் படைப்பு இரண்டு வகைப்படும்: தேவ இயல் கொண்டது, அஸுர இயல் கொண்டது. தேவ இயல் கொண்டதை விரித்துச் சொன்னேன். பார்த்தா, அஸுர இயல் கொண்டதைச் சொல்லுகிறேன், கேள். 6

**प्रवृत्तिं च निवृत्तिं च**
**जना न विदुरासुराः ।**
**न शौचं नापि चाचारो**
**न सत्यं तेषु विद्यते ॥ ७ ॥**

அஸுரத் தன்மை கொண்டோர் தொழிலியல்பையும் வீட்டியல்பையும் அறியார். தூய்மையேனும், ஒழுக்கமேனும், வாய்மையேனும் அவர்களிடம் காணப்படுவதில்லை. 7

**असत्यमप्रतिष्ठं ते**
**जगदाहुरनीश्वरम् ।**
**अपरस्परसम्भूतं**
**किमन्यत्कामहैतुकम् ॥ ८ ॥**

அவர்கள் இவ்வுலகம் உண்மையற்றதென்றும், நிலையற்றதென்றும், கடவுளற்றதென்றும் சொல்லுகிறார்கள். இது தொடர்பின்றிப் பிறந்ததென்றும், வெறுமே காமத்தை ஹேதுவாக உடையது என்றும் சொல்லுகிறார்கள். 8

एतां दृष्टिमवष्टभ्य
नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः
क्षयाय जगतोऽहिताः ॥ ९ ॥

இந்தக் காட்சியில் நிலை பெற்று அற்ப புத்தியுடைய அந்த நஷ்டாத்மாக்கள் உலகத்துக்குத் தீங்கு சூழ்வோராய் அதன் நாசத்துக்காகக் கொடிய தொழில் செய்கின்றனர். 9

काममाश्रित्य दुष्पूरं
दम्भमानमदान्विताः ।
मोहाद् गृहीत्वासद्ग्राहान्
प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥ १० ॥

நிரம்ப வொண்ணாத காமத்தைச் சார்ந்து, டம்பமும் கர்வமும் மதமும் பொருந்தியவராய், மயக்கத்தால் பொய்க் கொள்கைகளைக் கொண்டு அசுத்த நிச்சயங்களுடையோராய்த் தொழில் புரிகிறார்கள். 10

**चिन्तामपरिमेयां च**
**प्रलयान्तामुपाश्रिताः ।**
**कामोपभोगपरमा**
**एतावदिति निश्चिताः ॥ ११ ॥**

பிரளய மட்டுந் தீராத எண்ணற்ற கவலைகளிற் பொருந்தி, விருப்பங்களைத் தீர்த்துக் கொள்வதில் ஈடுபட்டோராய், 'உண்மையே இவ்வளவுதான்' என்ற நிச்சய முடையாராய், 11

**आशापाशशतैर्बद्धाः**
**कामक्रोधपरायणाः ।**
**ईहन्ते कामभोगार्थ-**
**मन्यायेनार्थसंचयान् ॥ १२ ॥**

நூற்றுக் கணக்கான ஆசைக் கயிறுகளால் கட்டுண்டு, காமத்துக்கும் சினத்துக்கும் ஆட்பட்டோராய்க் காம போகத்துக்காக அநியாயஞ் செய்து பொருட் குவைகள் சேர்க்க விரும்புகிறார்கள், 12

**इदमद्य मया लब्ध-**
**मिमं प्राप्स्ये मनोरथम् ।**
**इदमस्तीदमपि मे**
**भविष्यति पुनर्धनम् ॥ १३ ॥**

"இன்று இன்ன லாப மடைந்தேன்; இன்ன மனோரதத்தை இனி எய்துவேன்; இன்னவை யுடையேன்; இன்ன பொருளை இனிப் பெறுவேன். 13

**असौ मया हतः शत्रु-**
**र्हनिष्ये चापरानपि ।**
**ईश्वरोऽहमहं भोगी**
**सिद्धोऽहं बलवान् सुखी ॥ १४ ॥**

"இன்ன பகைவரைக் கொன்று விட்டேன்; இனி மற்றவர்களைக் கொல்வேன். நான் ஆள்வோன்; நான் போகி; நான் ஸித்தன்; நான் புலவான்; நான் ஸுக புருஷன். 14

आढ्योऽभिजनवानस्मि
कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य
इत्यज्ञानविमोहिताः ॥ १५ ॥

"நான் செல்வன், இனப்பெருக்க முடை
யோன்; எனக்கு நிகர் யாவருளர்? வேட்
கிறேன்; கொடுப்பேன்; களிப்பேன்" என்ற
அஞ்ஞானங்களால் மயங்கினோர், 15

अनेकचित्तविभ्रान्ता
मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु
पतन्ति नरकेऽशुचौ ॥ १६ ॥

பல சித்தங்களால் மருண்டோர், மோஹவலை
யிலகப்பட்டோர், காம போகங்களில் பற்றுண்
டோர்,—இவர்கள் அசுத்தமான நரகத்தில் விழு
கிறார்கள். 16

आत्मसम्भाविताः स्तब्धा
धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते
दम्भेनाविधिपूर्वकम् ॥ १७ ॥

இவர்கள் தற்புகழ்ச்சி யுடையோர், மூடர், செல்வச் செருக்கும் மதமு முடையோர்; டம்பத்துக்காக விதி தவறிப் பெயர் மாத்திரமான வேள்வி செய்கின்றனர். 17

अहङ्कारं बलं दर्पं
कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु
प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८ ॥

அஹங்காரத்தையும், பலத்தையும், செருக்கையும், விருப்பத்தையும், இனத்தையும் பற்றியவர்களாகிய இன்னோர் தம் உடம்புகளிலும் பிற உடம்புகளிலும் உள்ள என்னைப் பகைக்கின்றார்கள். 18

तानहं द्विषतः क्रूरान्
संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभा-
नासुरीष्वेव योनिषु ॥ १९ ॥

இங்ஙனம் பகைக்கும் கொடியோரை—உலகத்தில் எல்லாரிலும் கடைப்பட்ட இந்த அசுப மனிதரை—நான் எப்போதும் அஸுரப் பிறப்புக்களில் எறிகிறேன். 19

आसुरीं योनिमापन्ना
मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय
ततो यान्त्यधमां गतिम् ॥ २० ॥

பிறப்புத் தோறும் அஸுரக் கருக்களில் தோன்றும் இம் மூடர் என்னை யெய்தாமலே மிகவும் கீழான கதியைச் சேர்கிறார்கள், குந்தியின் மகனே! 20

**त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।**
**कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥**

ஆத்ம நாசத்துக் கிடமான இம்மூன்று வாயில்களுடையது நரகம்: (அவை யாவன) காமம், சினம், அவா. ஆதலால், இம் மூன்றையும் விடுக. 21

**एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।**
**आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥**

இந்த மூன்று இருள் வாயில்களினின்றும் விடுபட்டோன் தனக்குத் தான் நலந் தேடிக் கொள்ளுகிறான்; அதனால் பரகதி அடைகிறான். 22

**यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।**
**न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥**

சாஸ்த்ர விதியை மீறி, விருப்பத்தால் தொழில் புரிவோன் ஸித்தி பெறான்; அவன் இன்பமெய்தான்; பரகதியடையான். 23

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥

ஆதலால், எது செய்யத் தக்கது, எது செயத் தகாதது என்று நிச்சயிப்பதில் நீ சாஸ்த்ரத்தைப் பிரமாணமாகக் கொள். அதை யறிந்து சாஸ்த்ர விதியால் கூறப்பட்ட தொழிலைச் செய்யக் கடவாய். 24

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
दैवासुरसम्पद्विभागयोगो
नाम षोडशोऽध्यायः ।

இங்ஙனம் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும்
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையு மாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில்
"தேவ ஸம்பத்தும், அஸுர ஸம்பத்தும்"
என்ற பதினாறும் அத்யாயம்
முற்றிற்று.

# सप्तदशोऽध्यायः

## பதினேழாம் அத்யாயம்.

### மூவகை நம்பிக்கை.

अर्जुन उवाच—

ये शास्त्रविधिमुत्सृज्य
यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण
सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥

அர்ஜுனன் சொல்லுகிறான்—

கண்ணா, சாஸ்த்ர விதியை மீறி, ஆனாலும் நம்பிக்கையுடன், வேள்வி செய்வோருக்கு என்ன நிலை கிடைக்கிறது? ஒளி நிலையா? கிளர்ச்சி நிலையா? அல்லது இருள் நிலையா? (ஸத்வமா, ரஜஸா, தமஸா?)

श्रीभगवानुवाच—

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥

பகவான் சொல்லுகிறன்:—

ஜீவர்களிடம் இயற்கையால் நம்பிக்கை மூன்று வகையாகத் தோன்றுகிறது, ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம் என; அதைக் கேள். 2

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥३

பாரதா, யாவருக்கும் தத் தம் உள்ளியல்புக்கு ஒத்தபடியாகவே நம்பிக்கை அமைகிறது. மனிதன் * சிரத்தை மயமானவன். எவன் எந்தப் பொருளில் நம்பிக்கையுடையவனே, அந்தப் பொருளே தான்ஆகிறான். 3

* சிரத்தை-நம்பிக்கை.

**यजन्ते सात्त्विका देवान्**
**यक्षरक्षांसि राजसाः ।**
**प्रेतान् भूतगणांश्चान्ये**
**यजन्ते तामसा जनाः ॥ ४ ॥**

ஒளி யியல்புடையோர் வானவர்க்கு வேள்வி செய்கின்றனர். ரஜோ குணமுடையோர் யக்ஷர்களுக்கும் ராக்ஷஸருக்கும் வேள்வி செய்கிறார்கள். மற்றத் தமோ குணமுடையோர் ப்ரேத பூத கணங்களுக்கு வேள்வி செய்கிறார்கள். 4

**अशास्त्रविहितं घोरं**
**तप्यन्ते ये तपो जनाः ।**
**दम्भाहङ्कारसंयुक्ताः**
**कामरागबलान्विताः ॥ ५ ॥**

(சிலர்) சாஸ்த்ர நியமத்தை மீறி, டம்பமும் அஹங்காரமு முடையாராய், விருப்பத்திலும் விழைவிலும் சார்புற்றவர்களாய், கோரமான தவஞ் செய்கிறார்கள். 5

कर्षयन्तः शरीरस्थं
भूतग्राममचेतसः ।
मां चैवान्तः शरीरस्थं
तान् विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥

இங்ஙனம் அறிவு கெட்டோராய்த் தம் உடம்பினுள்ள பூதத் தொகுதிகளையும் அகத்திலுள்ள என்னையும் வருத்துகிறார்கள். இவர்கள் அஸுர நிச்சய முடையோரென்றுணர். 6

आहारस्त्वपि सर्वस्य
त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं
तेषां भेदमिमं शृणु ॥ ७ ॥

ஒவ்வொருவருக்கும் பிரியமான உணவும் மூன்று வகைப்படுகிறது. வேள்வியும், தவமும், தானமும் அங்ஙனமே மும்மூன்று வகைப்படுகின்றன. அவற்றின் வேற்றுமையைக் கேள். 7

आयुः सत्त्वबलारोग्य-
सुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्या
आहाराः सात्त्विकप्रियाः ॥ ८ ॥

உயிர் சக்தி பலம் நோயின்மை இன்பம் பிரீதி இவற்றை மிகுதிப் படுத்துவன, சுவையுடையன, குழம்பாயின, உறுதி புடையன, உளமுகந்தன-இவ் வுணவுகள் ஸத்வகுணமுடையோருக்குப் பிரியமானவை. 8

कट्वम्ललवणात्युष्ण-
तीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा
दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥

கசப்பும் புளிப்பும் உப்பும் உறைப்பும் மிகுந்தன, அதிகச் சூடு கொண்டன, உலர்ந்தன, எரிச்சலுடையன—இவ்வுணவுகளை ரஜோ குணமுடையோர் விரும்புவர். இவை துன்பத்தையும் துயரையும் நோயையும் விளைப்பன. 9

यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥१०

பழையது, சுவையற்றது, அழுகியது, கெட்டுப்போனது, எச்சில், அசுத்தம்—இத்தகைய உணவு தமோ குணமுடையோருக்குப் பிரியமானது. 10

अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।
यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥११॥

பயனை விரும்பாதவர்களாய், வேள்வி புரிதல் கடமை யென்று மனந்தேறி, விதிகள் சொல்லிய படி இயற்றுவாரின் வேள்வி ஸத்வ குணமுடைத்து. 11

अभिसन्धाय तु फलं दम्भार्थमपि चैव यत् ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२ ॥

பயனைக் குறித்தெனினும், ஆடம்பரத்துக்கெனினும் செய்யப்படும் வேள்வி ராஜஸமென்றுணர்; பாரதரிற் சிறந்தாய்! 12

**विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।**
**श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥**

விதி தவறியது, பிறர்க்குணவு தாராதது, மந்திர மற்றது, தக்ஷிணையற்றது, நம்பிக்கையின்றிச் செய்யப்படுவது—இத்தகைய வேள்வியைத் தாமஸமென்பார். 13

**देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।**
**ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४ ॥**

தேவர் அந்தணர் குருக்கள் அறிஞர் இவர்களுக்குப் பூஜை செய்தல், தூய்மை, நேர்மை, ப்ரம்மசர்யம், கொல்லாமை—இவை உடம்பைப் பற்றிய தவமெனப்படும். 14

**अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।**
**स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥**

சினத்தை விளைக்காததும் உண்மையுடையதும் இனியதும் நலங்கருதியது மாகிய சொல்லல், கல்விப்பயிற்சி—இவை வாக்குத் தவமெனப்படும். 15

**मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।**
**भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६ ॥**

மன அமைதி, மகிழ்ச்சி, மௌனம், தன்னைக் கட்டுதல், எண்ணத் தூய்மை—இவை மனத் தவமெனப்படும். 16

**श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।**
**अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥**

பயனை விரும்பாத யோகிகளால் மேற்கூறிய மூன்று வகைகளிலும் உயர்ந்த நம்பிக்கையுடன் செய்யப்படும் தவம் ஸாத்விகமெனப்படும். 17

**सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।**
**क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८ ॥**

மதிப்பையும் பெருமையையும் பூஜையையும் நாடிச் செய்வதும் ஆடம்பரத்துக்காகச் செய்வதுமாகிய தவம் ராஜஸமெனப்படும்; அஃது நிலையற்றது; உறுதியற்றது. 18

**मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।**
**परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥ १९ ॥**

மூடர் கொள்கையுடன் தன்னைத் தான் துன்பப் படுத்திக்கொண்டு செய்வதும், பிறரைக் கெடுக்குமாறு செய்வதுமாகிய தவம் தாமஸ மெனப்படும். 19

**दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।**
**देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥**

கொடுத்தல் கடமையென்று கருதிக் கைம்மாறு வேண்டாமல், தகுந்த இடத்தையும் காலத்தையும் பாத்திரத்தையும் நோக்கிச் செய்யப்படும் தானத்தையே ஸாத்விக மென்பர். 20

**यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।**
**दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥२१॥**

கைம்மாறு வேண்டியும், பயனைக் கருதியும், கிலேசத்துடன் கொடுக்கப்படும் தானத்தை ராஜஸ மென்பர். 21

**अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।**
**असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥**

தகாத இடத்தில், தகாத காலத்தில், தகாதார்க்குச் செய்யப்படுவதும், மதிப்பின்றி இகழ்ச்சியுடன் செய்யப்படுவது மாகிய தானம் தாமஸமெனப்படும். 22

**ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।**
**ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥**

'ஓம் தத் ஸத்' என்ற மும்மைப் பெயர் ப்ரம்மத்தைக் குறிப்பதென்பர். அதனால் முன்பு ப்ராமணங்களும், வேதங்களும், வேள்விகளும் வகுக்கப்பட்டன. 23

**तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।**
**प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४**

ஆதலால், ப்ரம்மவாதிகள் விதிப்படி புரியும் வேள்வி தவம் தானம் என்ற கிரியைகள் எப்போதும் 'ஓம்' என்று தொடங்கிச் செய்யப்படுகின்றன. 24

**तदित्यनभिसन्धाय फलं यज्ञतपःक्रियाः ।**
**दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः॥**

'தத்' என்ற சொல்லை உச்சரித்துப் பய
னைக் கருதாமல், பலவகைப்பட்ட வேள்வியும்
தவமும் தானமுமாகிய கிரியைகள் மோக்ஷத்தை
விரும்புவோரால் செய்யப்படுகின்றன. 25

**सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।**
**प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥**

'ஸத்' என்ற சொல் உண்மை யென்ற
பொருளிலும், நன்மை யென்ற பொருளிலும்
வழங்கப்படுகிறது. பார்த்தா, புகழ்தற் குரிய
செய்கையைக் குறிப்பதற்கும் 'ஸத்' என்ற
சொல் வழங்குகிறது. 26

**यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।**
**कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥**

வேள்வி தவம் தானம் இவற்றில் உறுதி நிலை
யும் 'ஸத்' எனப்படுகிறது. ப்ரம்மத்தின் பொருட்
டாகச் செய்யும் கர்மமும் 'ஸத்' என்றே சொல்
லப்படும். 27

**अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥२८॥**

அசிரத்தையுடன் செய்யும் வேள்வியும், தானமும், தவமும், கர்மமும் 'அஸத்' எனப்படும். பார்த்தா, அவை மறுமையிலும் பயன்படா; இம்மையிலும் பயன்படா. 28

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां
योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे
श्रद्धात्रयविभागयोगो
नाम सप्तदशोऽध्यायः ।**

இங்ஙனம் உபநிஷத்தும் ப்ரம்ம வித்தையும்
யோக சாஸ்த்ரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்பாஷணையுமாகிய ஸ்ரீமத் பகவத்
கீதையில் "மூவகை நம்பிக்கை" என்ற
பதினேழாம் அத்யாயம் முற்றிற்று.

# अष्टादशोऽध्यायः

## பதினெட்டாம் அத்யாயம்.

### ஸந்யாஸ யோகம்.

अर्जुन उवाच—

**संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।**
**त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १ ॥**

அர்ஜுனன் சொல்லுகிறன்:—

உயர் புயத்தோய், கண்ணு, கேசியைக் கொன்ருேய் *, ஸந்யாஸத்தின் இயல்பையும் தியாகத்தின் இயல்பையும் பிரித்துக் கேட்க விரும்புகிறேன். 1

---

* ஸந்யாஸம்—துறவு; த்யாகம் - விடுதல். (இவற்றின் விரிவான விளக்கத்தை அனுபந்தத்தில் காண்க).

श्रीभगवानुवाच—

काम्यानां कर्मणां न्यासं
संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं
प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥

பகவான் சொல்லுகிறன்—

விருப்பத்தால் செய்யப்படும் செய்கைகளைத் துறப்பது ஸந்யாஸ மென்று புலவர் தெரிந்துளர். எல்லாவிதச் செயல்களின் பயன்களையுந் துறந்து விடுதல் தியாக மென்று ஞானிகள் கூறுவர். 2

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥ ३ ॥

சில அறிஞர் செய்கையைக் குற்றம் போலே கருதி விட்டு விடவேண்டும் என்கிறார்கள். வேறு சிலர் 'வேள்வி, தானம், தவம் என்ற செயல்களை விடக்கூடாது' என்கிறார்கள். 3

निश्चयं शृणु मे तत्र
त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र
त्रिविधः सम्प्रकीर्तितः ॥ ४ ॥

பாரதரில் சிறந்தவனே, புருஷப் புலியே, தியாக விஷயத்தில் நான் நிச்சயத்தைச் சொல்லு கிறேன்; கேள். தியாகம் மூன்று வகையாகக் கூறப்பட்டது. 4

यज्ञदानतपःकर्म
न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव
पावनानि मनीषिणाम् ॥ ५ ॥

வேள்வி, தானம், தவம் என்ற செயல்களை விடக்கூடாது. அவற்றைச் செய்யவே வேண் டும். வேள்வியும், தானமும், தவமும் அறிவுடை யோரைத் தூய்மைப் படுத்துகின்றன. 5

एतान्यपि तु कर्माणि
सङ्गं त्यक्त्वा फलानि च ।
कर्तव्यानीति मे पार्थ
निश्चितं मतमुत्तमम् ॥ ६ ॥

ஆனால், பார்த்தா, இச் செயல்களைக் கூட ஒட்டின்றியும், பயன்களை வேண்டாமலும் செய்ய வேண்டும் என்பது என் உத்தமமான நிச்சயக் கொள்கை. 6

नियतस्य तु संन्यासः
कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्याग-
स्तामसः परिकीर्तितः ॥ ७ ॥

† நியமத்தின்படி யுள்ள செய்கையைத் துறத்தல் தகாது. மதி மயக்கத்தால் அதனை விட்டு விடுதல் தமோகுணத்தால் நேர்வ தென்பர். 7

† நியமம் - ஒழுக்கு, சட்டம், சாஸ்த்ர விதி.

दुःखमित्येव यत्कर्म
कायक्लेशभयात्त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं
नैव त्यागफलं लभेत् ॥ ८ ॥

உடம்புக்கு வருத்தம் நேருமென்ற பயத்தால், ஒரு செய்கையைத் துன்பமாகக் கருதி, அதனை விட்டுவிடுவோன் புரியும் தியாகம் ரஜோ குணத்தின்பாற் பட்டது. அதனால் அவன் தியாகப் பயனை அடையமாட்டான். 8

कार्यमित्येव यत्कर्म
नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गं त्यक्त्वा फलं चैव
स त्यागः सात्त्विको मतः ॥ ९ ॥

நியமத்துக் கிணங்கிய செய்கையை, 'இது செய்தற் குரியது' என்று மெண்ணத்தால் செய்து, அதில் ஒட்டுதலையும்* பயன் வேண்டலையும் ஒருவன் விட்டுவிடுவானாயின், அவனுடைய தியாகமே ஸாத்விக மெனப்படும். 9

---

* ஒட்டுதல் - விருப்பம்.

न द्वेष्ट्यकुशलं कर्म
कुशले नानुषज्जते ।
त्यागी सत्त्वसमाविष्टो
मेधावी छिन्नसंशयः ॥ १० ॥

ஸத்வ குணத்திலிசைந்து, மேதாவியாய், ஐயங்களை யறுத்த தியாகி இன்பமற்ற செய்கையைப் பகைப்ப தில்லை, இன்ப முடைய செய்கையில் *ஈசை யுறுவ தில்லை. 10

नहि देहभृता शक्यं
त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी
स त्यागीत्यभिधीयते ॥ ११ ॥

(மேலும்) உடம் பெடுத்தவனால் செய்கைகளை முழுதுமே விட்டுவிட முடியாது. எவன் செய்கைகளின் பயனைத் துறக்கிறானோ, அவனே தியாகி யெனப்படுவான். 11

---

* ஈசை - பற்றுதல்.

अनिष्टमिष्टं मिश्रं च
त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य
न तु संन्यासिनां क्वचित् ॥ १२ ॥

வேண்டப் படாதது, வேண்டப் படுவது, இரண்டும் கலப்பானது என மூன்று வகைப் பட்ட கர்மப் பயன்களைத் தியாகிக ளல்லாதோர் இறந்த பின்னர் எய்துகின்றனர். ஸந்யாஸி களுக்கு எங்கும் பயன் கிடைப்பதில்லை. 12

पञ्चैतानि महाबाहो
कारणानि निबोध मे ।
साङ्ख्ये कृतान्ते प्रोक्तानि
सिद्धये सर्वकर्मणाम् ॥ १३ ॥

எல்லாச் செயல்களும் நிறைவேறுதற்குரிய காரணங்கள் ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் ஐந்தாகக் கூறப்பட்டன. அவற்றை என்னிடம் கேட் டுணர், பெருந்தோளாய். 13

**अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।**
**विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥१४**

அவை* இடம், கர்த்தா, பலவிதக் கரணங்கள், வெவ்வேறு வகைப்பட்ட செயல் முறைகள், இயற்கை என ஐந்து. 14

**शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।**
**न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥१५**

மனிதன் உடம்பாலும் வாக்காலும் மனத்தாலும் எந்தச் செயலைத் தொடங்கினாலும், அது நியாயமாயினும் விபரீதமாயினும், இவ்வைந்துமே அச் செயலின் ஹேதுக்களாம். 15

---

* கர்த்தா-தொழில் செய்வோன். * கரணம் - கருவி. உட்கரணங்களாவன: மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்; புறக் கரணங்கள் புலன்களும் பூதக்கருவிகளுமாம். * "தைவம்" - இயற்கை.

**तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।**
**पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६ ॥**

இங்ஙன மிருக்கையில், தனிப் பொருளாகிய ஆத்மாவைத் தொழில் செய்வோனாக எவன் புத்திக் குறைவால் காணுகிறானோ, அந்த மூடன் காட்சி யற்றவனே யாவான். 16

**यस्य नाहङ्कृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।**
**हत्वाऽपि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥**

'நான்' எனுங் கொள்கை தீர்ந்தான், பற்றுதல்க ளற்ற மதி யுடையான் அவன் இவ்வுலகத்தாரை யெல்லாங் கொன்ற போதிலும் கொலையாளி யாகான், கட்டுப்படமாட்டான். 17

**ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।**
**करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसङ्ग्रहः ॥१८॥**

அறிவு, அறியப்படு பொருள், அறிவோன்— என இம் மூன்றும் செயல்களைத் தூண்டுவன. கருவி, செய்கை, கர்த்தா எனக் கர்மத்தின் சமைப்பு மூன்று பகுதிப்பட்டது. 18

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यन्ते गुणसङ्ख्याने यथावच्छृणु तान्यपि ॥

குணங்களை யெண்ணுமிடத்தே, ஞானம், கர்மம், கர்த்தா, இவை குணபேதங்களால் மும்மூன்று வகைப்படும். அவற்றையும் உள்ளபடி கேள். 19

सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥

பிரிவுபட்டு நிற்கும் எல்லா உயிர்களிலும் பிரிவற்ற நாசமற்ற ஒரே இயல்பைக் காணும் ஞானம் ஸாத்விக மென்றறி. 20

पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान् पृथग्विधान् ।
वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१

உயிர்க ளனைத்திலும் வெவ்வேறு வகைப்பட்ட பல இயல்புகள் இருப்பதாகப் பிரித்துக் காணும் ஞானம் ராஜஸ மென்றுணர். 21

**यत्तु कृत्स्नवदेकस्मिन् कार्ये सक्तमहैतुकम् ।**
**अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥**

காரணங் கருதாமல், யாதேனும் ஒற்றைக் காரியத்தை அனைத்துமாகக் கருதிப் பற்றுத லெய்துவதும், உண்மையியலறியாததும், அற்பத் தன்மை யுடையதும் ஆகிய ஞானம் தாமஸ மென்று கூறப்படும். 22

**नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।**
**अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥२३॥**

பயன்களை வேண்டாத வொருவன், பற்றுத லின்றி, விருப்பு வெறுப்பின்றிச் செய்யும் விதி தழுவிய செய்கை ஸாத்விக மெனப்படும். 23

**यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः ।**
**क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४ ॥**

விருப்பங்களுக்கு வசப்பட்டவனால் அல்லது அஹங்கார முடையவனால் செய்யப்படும் மிகுந்த ஆயாஸத்துக்கிடமான செய்கை ராஜஸ மெனப் படும். 24

अनुबन्धं क्षयं हिंसामनपेक्ष्य च पौरुषम् ।
मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥ २५ ॥

செய்கையின் பின்விளைவையும், அதனால் பிறருக்கு நேரக்கூடிய நாசத்தையும், துன்பத்தையும், செய்வானது திறமையையும் கருதாமல், அறிவின்மையால் தொடங்கப்படும் கர்மம் தாமஸ மெனப்படும். 25

मुक्तसङ्गोऽनहंवादी
धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः
कर्ता सात्त्विक उच्यते ॥ २६ ॥

ஆசைகளற்றான், நானென்ப தற்றான்,
உறுதியுங் களிதரும் ஊக்கமு முடையான்,
வெற்றி தோல்வியில் வேறுபா டற்றான்—
இங்ஙனமாகித் தொழில்க ளியற்றுவோன்
ஒளி யியல்புடையா னென்ப. 26

**रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।**
**हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥२७**

வேட்கை யுடையோன், செய்கைப் பயன் களை விரும்புவோன், லோபி, இடர் செய்வோன், தூய்மை யற்றோன், களிக்குந் துயருக்கும் வசப் பட்டோன்—இவ் வண்ணமாகித் தொழில் செய் வோன் ரஜோ குணத்தா னென்பர். 27

**अयुक्तः प्राकृतः स्तब्धः**
**शठो नैष्कृतिकोऽलसः ।**
**विषादी दीर्घसूत्री च**
**कर्ता तामस उच्यते ॥ २८ ॥**

யோக நிலை பெறாதோன், அநாகரிகன், மூர டன், வஞ்சகன், பொறாமை யுடையோன், சோம்பேறி, ஏக்கம் பிடித்தவன், காலத்தை நீட்டித்துக் கொண்டே போவோன்—இவ் வண்ணமாகித் தொழில் செய்வோன் தமோ குணமுடையா னெனப்படுவான். 28

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय ॥ २९ ॥

குண வகையால் மூன்று விதமாகிய புத்தியின் வேற்றுமைகளையும், மன உறுதியின் வேற்றுமைகளையும், மிச்சமின்றிப் பகுத்துரைக்கிறேன்; தனஞ்ஜயா, கேள். 29

प्रवृत्तिं च निवृत्तिं च
कार्याकार्ये भयाभये ।
बन्धं मोक्षं च या वेत्ति
बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥

தொழிலெது, ஒழிவு யாது, செய்யத் தக்கது யாது, தகாதது யாது, அச்சமெது, அஞ்சாமையெது, பந்தமெது, விடுதலையெது—என்பவற்றைப் பகுத்தறியும் புத்தியே, பார்த்தா, ஸாத்விக புத்தியாம். 30

यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।
अयथावत् प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥

தர்மத்தையும் அதர்மத்தையும் கார்யத்தையும் அகார்யத்தையும் உள்ளபடி யறியாத புத்தி ராஜஸ மெனப்படும், பார்த்தா. 31

अधर्मं धर्ममिति या मन्यते तमसाऽऽवृता ।
सर्वार्थान् विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥

பார்த்தா, இருளால் கவரப்பட்டதாய், அதர்மத்தை தர்மமாகக் கருதுவதும் எல்லாப் பொருள்களையும் நேருக்கு மாறாகக் காண்பதும் ஆகிய புத்தி தாமஸ புத்தியாம். 32

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्विकी ॥

மனம், உயிர், புலன்கள், இவற்றின் செயல்களைப் பிறழ்ச்சி யில்லாத யோகத்துடன் தரிக்க வல்லதாகிய மன உறுதியே ஸாத்விக மாவது, பார்த்தா. 33

**यथा तु धर्मकामार्थान् धृत्या धारयतेऽर्जुन ।**
**प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी ॥**

பார்த்தா, பற்றுத லுடையோனாய்ப் பயன்களை விரும்புவோன் அறம் பொருளின்பங்களைப் பெறுவதில் செலுத்தும் உறுதி ராஜஸ உறுதியாம். 34

**यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।**
**न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥**

பார்த்தா, உறக்கத்தையும் அச்சத்தையும் துயரத்தையும் ஏக்கத்தையும் மதத்தையும் மாற்றத் திறமை யில்லாத மூட உறுதி தமோ குணத்தைச் சார்ந்தது. 35

**सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।**
**अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥३६**

பாரதக் காளையே, இப்போது மூன்று விதமாகிய இன்பங்களைச் சொல்லுகிறேன், கேள். எதனிலே ஒருவன் பயிலப் பயில உவகை மிகுதியுறப் பெறுவானோ, எதனில் துக்க நாச மெய்துவானோ, 36

**यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।**
**तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७**

எது தொடக்கத்தில் விஷத்தை யொத்ததாய் விளைவில் அமிர்த மொப்ப மாறுவதோ, அந்த இன்பமே ஸாத்விக மாகும்; அஃது தன் மதியின் விளக்கத்திலே பிறப்பது. 37

**विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८**

விஷயங்களிலே புலன்களைப் பொருத்துவதனால் தொடக்கத்தில் அமுதைப் போலிருந்து விளைவில் நஞ்சு போன்றதாய் முடியும் இன்பம் ராஜஸ மெனப்படும். 38

**यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।**
**निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९ ॥**

தொடக்கத்திலும் இறுதியிலும் ஒருங்கே ஆத்மாவுக்கு மயக்கம் விளைவிப்பதாய், உறக்கத்தினின்றும் சோம்பரினின்றும் தவறுதலினின்றும் பிறக்கும் இன்பம் தாமஸமென்று கருதப்படும்.

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥४०

இயற்கையில் தோன்றும் இம் மூன்று குணங்களினின்றும் விடுபட்ட உயிர் மண்ணுலகத்திலு மில்லை; வானுலகத்தில் தேவருள்ளேயு மில்லை. 40

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परन्तप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१ ॥

பரந்தபா! பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களுடைய தொழில்கள் அவரவரின் இயல்பில் விளையும் குணங்களின்படி வகுப்புற்றனவாம். 41

शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥

அகக் கரணத்தை யடக்குதல், புறக் கரணத்தை யடக்குதல், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, ஞானம், கல்வி, ஆஸ்திகம்—இவை இயல்பிலே தோன்றும் பிராம்மண கர்மங்களாம். 42

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम्।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥४३॥

சூரத் தன்மை, ஒளி, உறுதி, திறமை, போரில் புறங் காட்டாமை, ஈகை, இறைமை—இவை இயற்கையிலே தோன்றும் க்ஷத்ரிய கர்மங்களாம்.
43

कृषिगोरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम्।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥४४

உழவு, பசுக் காத்தல், வாணிகம் இவை இயற்கையிலே பிறக்கும் வைசிய கர்மங்களாம். தொண்டு புரிதல் சூத்திரனுக்கு அவனியற்கையால் ஏற்பட்ட தொழில்.
44

स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥४५

தனக்குத் தனக்கு உரிய கர்மத்தில் மகிழ்ச்சியுறும் மனிதன் ஈடேற்றம் பெறுகிறான். தனக்குரிய தொழிலில் இன்புறுவோன் எங்ஙனம் வித்தி யடைகிறானென்பது சொல்லுகிறேன், கேள்.
45

**यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।**
**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥**

*உயிர்களுக் கெல்லாம் பிறப்பிடமாய், இவ் வையக மனைத்திலும் நிறைந்திருக்கும் கடவுளைத் தனக்குரிய கர்மத்தால் பூஜை செய்யும் மனிதன் ஈடேறுகிறான்.* 46

**श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् ।**
**स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥४७॥**

*பிறர்க்குரிய தர்மத்தை நன்கு செய்வதைக் காட்டிலும் தனக்குரிய தர்மத்தை குணமின்றிச் செய்தலும் நன்று. இயற்கையி லேற்பட்ட தொழிலைச் செய்வதனால், ஒருவன் பாவ மடைய மாட்டான்.* 47

**सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।**
**सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥४८॥**

*• குந்தி மகனே, இயல்பான தொழில் குறை யுடையதாயினும், அதைக் கைவிட லாகாது. தீயைப் புகை சூழ்ந்திருப்பது போல், எல்லாத் தொழில்களையும் குறைகள் சூழ்ந்தே நிற்கின்றன.*

**असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।**
**नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥४९**

யாங்கணும் வீழ்விலா மதியுடையோனாய், தன்னை வென்று விருப்பந் தவிர்ந்து, பின்னர்ச் செயலிலாப் பெரி தயர்ந்த வெற்றியைத் துறவினால் எய்துவான். 49

**सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।**
**समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥५०**

ஸித்தி யடைந்தவன் எங்ஙனம் ப்ரம்மத்தில் கலப்பதாகிய மிகச் சிறந்த ஞான நிலை யெய்துவா னென்பதைக் கூறுகிறேன், கேள். 50

**बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।**
**शब्दादीन् विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥**

தூய்மை பெற்ற புத்தி யுடையவனாய், உறுதி யால் தன்னைக் கட்டுப்படுத்தி, ஒலி முதலிய விஷயங்களைத் துறந்து, விருப்பு வெறுப்புக்களை எறிந்துவிட்டு, 51

**विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।**
**ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥५२॥**

தனி இடங்களை நாடுவோனாய், ஆசைகள் குன்றி, வாக்கையும் உடம்பையும் மனத்தையும் வென்று, தியான யோகத்தில் ஈடுபட்டு, எப்போதும் பற்றின்மையை நன்கு பற்றியவனாய், 52

**अहङ्कारं बलं दर्पं**
**कामं क्रोधं परिग्रहम् ।**
**विमुच्य निर्ममः शान्तो**
**ब्रह्मभूयाय कल्पते ॥ ५३ ॥**

அஹங்காரம் வலிமை செருக்கு காமம் சினம் இரத்தல்—இவற்றை விட்டு, * மமகாரம் நீங்கி, சாந்த நிலை கொண்டவன் ப்ரம்மமாகத் தகுவான். 53

* மமகாரம் - உடைமை யுணர்ச்சி.

ब्रह्मभूतः प्रसन्नात्मा
न शोचति न काङ्क्षति ।
समः सर्वेषु भूतेषु
मद्भक्तिं लभते पराम् ॥ ५४ ॥

ப்ரம்ம நிலை பெற்றோன், ஆனந்த முடை யோன், துயரற்றோன், விருப்பற்றோன், எல்லா உயிர்களையும் ஸமமாக நினைப்போன், உயர்ந்ததாகிய என் பக்தியை அடைகிறான். 54

भक्त्या मामभिजानाति
यावान् यश्चास्मि तत्त्वतः ।
ततो मां तत्त्वतो ज्ञात्वा
विशते तदनन्तरम् ॥ ५५ ॥

யான் எவ்வளவுடையேன், யாவன், என என்னை யொருவன் உள்ளபடி பக்தியாலேயே அறிகிறான். என்னை உள்ளபடி அறிந்துகொண்ட பின்னர் 'தத்' (அது) எனப்படும் ப்ரம்மத்தில் புகுவான். 55

**सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।**
**मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥५६॥**

எல்லாத் தொழில்களையும் எப்போதும் செய்து கொண்டிருந்தாலும், என்னையே சார்பாகக் கொண்டோன் எனதருளால் அழிவற்ற நித்ய பதவியை எய்துகிறான். 56

**चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।**
**बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥ ५७ ॥**

அறிவினால் செயல்களை யெல்லாம் எனக்கெனத் துறந்துவிட்டு, என்னிடத்தே ஈடுபட்டு, புத்தி யோகத்தில் சார்புற்று, எப்போதும் என்னைச் சித்தத்தில் கொண்டு இரு. 57

**मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।**
**अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥५८**

என்னைச் சித்தத்தில் கொண்டிருப்போன் எல்லாத் தடைகளையும் எனதருளால் கடந்து செல்வாய். அன்றி நீ அஹங்காரத்தால் இதனைக் கேளாது விடுவாயெனில் பெரிய நாசத்தை அடைவாய். 58

यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥

நீ அஹங்காரத்தி லகப்பட்டு "இனிப் போர் புரியேன்" என்று துணிவாயாயின், நினது துணிவு பொய்மைப் பட்டுப் போம். இயற்கை உன்னைப் போரிற் பிணிக்கும். 59

स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात् करिष्यस्यवशोऽपि तत् ॥

இயற்கையில் தோன்றிய ஸ்வகர்மத்தால் கட்டுண்டிருக்கும் நீ, மயக்கத்தால் அதனைச் செய்ய விரும்பா யெனினும், தன் வசமின்றியேனும் அதைச் செய்யலாவாய். 60

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१

அர்ஜுனா, எல்லா உயிர்களுக்கும் ஈசன் உள்ளத்தில் நிற்கிறான்; மாயையால் அவன் எல்லா உயிர்களையும் சக்கரத்தி லேற்றிச் சுழற்றுகிறான். 61

**तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।**
**तत्प्रसादात्परां शांतिं स्थानं प्राप्स्यति शाश्वतम् ॥**

பாரதா, எல்லா வடிவங்களிலும் அவனையே
சரணெய்து. அவனருளால் பரம சாந்தியாகிய
நித்ய ஸ்தானத்தை எய்துவாய். 62

**इति ते ज्ञानमाख्यातं गुह्याद् गुह्यतरं मया ।**
**विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३ ॥**

இங்ஙனம் ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமாகிய
ஞானத்தை உனக்குரைத்தேன். இதனை முற்றி
லும் ஆராய்ச்சி செய்து எப்படி இஷ்டமோ அப்
படிச் செய். 63

**सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।**
**इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥**

மீட்டுமொரு முறை எல்லாவற்றிலும் ஆழ்ந்த
ரஹஸ்ய மாகிய எனது பரம வசனத்தைக்
கேள். நீ திடமான நண்பன். ஆதலால் உனக்கு
ஹிதத்தைச் சொல்லுகிறேன். 64

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥६५**

உன் மனத்தை எனக்காக்குக. என் தொண்டனாகுக. எனக்கென வேள்வி செய்க. என்னையே வணங்குக. என்னை யெய்துவாய். உண்மை யிஃதே. உனக்கிது சபதமுரைக்கிறேன். நீ எனக் கினியை. 65

**सर्वधर्मान् परित्यज्य**
**मामेकं शरणं व्रज ।**
**अहं त्वा सर्वपापेभ्यो**
**मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥**

எல்லா அறங்களையும் விட்டுவிட்டு என்னையே சரண் புகு. எல்லாப் பாவங்களி னின்றும் நான் உன்னை விடுவிக்கிறேன், துயரப்படாதே. 66

**इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।**
**न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥**

இதை எப்போதும் தவமிலாதோனுக்கும், பக்தி யில்லாதோனுக்கும், கேட்க விரும்பாதோனுக்கும், என்பால் பொறாமை யுடையோனுக்கும் சொல்லாதே. 67

य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयम् ॥६८

இந்தப் பரம ரஹஸ்யத்தை என் பக்தர்களி னிடையே சொல்லுவோன் என்னிடத்தே பரம பக்தி செலுத்தி என்னையே எய்துவான்; ஐய மில்லை; 68

न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥६९

மானுடருள்ளே, அவனைக் காட்டிலும் எனக் கினிமை செய்வோன் வேறில்லை. உலகத்தில் அவனைக் காட்டிலும் எனக்கு உகந்தவன் வேறொருவனுமாகான். 69

अध्येष्यते च य इमं
धर्म्यं संवादमावयोः ।
ज्ञानयज्ञेन तेनाह-
मिष्टः स्यामिति मे मतिः ॥ ७० ॥

நம்முடைய இந்த தர்மமயமான ஸம்பா ஷணையை எவன் படிப்பானோ, அவன் செய்யும் அந்த ஞான யக்ஞத்தால் நான் திருப்தி பெறு வேன்; இஃதென் கொள்கை. 70

श्रद्धावाननसूयश्च
शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभाँल्लोकान्
प्राप्नुयात् पुण्यकर्मणाम् ॥ ७१ ॥

நம்புதல் கொண்டு, பொறாமை போக்கி, இதனைக் கேட்பது மட்டுமே செய்வா னெனினும், அவனும் விடுதலை யடைவான். அப்பால் புண்ணியச் செயலினர் தந் நல்லுலகங்க ளெய்துவான். 71

कच्चिदेतच्छ्रुतं पार्थ
त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसम्मोहः
प्रणष्टस्ते धनञ्जय ॥ ७२ ॥

பார்த்தா, சித்தத்தை ஏகாந்த மாக்கி இந்த நீ கேட்டு வந்தனையா? தனஞ்ஜயா, உன் அஞ்ஞான மயக்கம் அழிந்ததா? 72

अर्जुन उवाच—

नष्टो मोहः स्मृतिर्लब्धा
त्वत्प्रसादान्मयाऽच्युत ।
स्थितोऽस्मि गतसन्देहः
करिष्ये वचनं तव ॥ ७३ ॥

அர்ஜுநன் சொல்லுகிறன்—

மயக்க மழிந்தது நின்னருளாலே, அச்சுதா, நான் நினைவு அடைந்தேன்; ஐயம் விலகி நிற்கிறேன்; நீ செய்யச் சொல்வது செய்வேன். 73

सञ्जय उवाच—

इत्यहं वासुदेवस्य
पार्थस्य च महात्मनः ।
संवादमिममश्रौष-
मद्भुतं रोमहर्षणम् ॥ ७४ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறன்—

இப்படி நான் வாஸுதேவனுக்கும் மஹாத்மாவாகிய பார்த்தனுக்கும் நிகழ்ந்த அற்புதமான—புளகந் தரக்கூடிய—அந்த ஸம்பாஷணையைக் கேட்டேன். 74

व्यासप्रसादाच्छ्रुतवा-
नेतद् गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात् कृष्णात्
साक्षात्कथयतः स्वयम् ॥ ७५ ॥

யோகக் கடவுளாகிய கண்ணன் இந்தப் பரம ரஹஸ்யமான யோகத்தைத் தான் நேராகவே சொல்லும்போது நான் அதை வ்யாஸனருளால் கேட்டேன். 75

राजन् संस्मृत्य संस्मृत्य
संवादमिममद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं
हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६ ॥

அரசனே, கேசவார்ஜுனரின் வியப்புக்குரிய இந்தப் புண்ய ஸம்பாஷணையை நினைத்து நினைத்து நான் மீட்டு மீட்டும் களிப் பெய்து கிறேன். 76

तच्च संस्मृत्य संस्मृत्य
रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान् राजन्
हृष्यामि च पुनः पुनः ॥ ७७ ॥

அரசனே, ஹரியின் மிகவும் அற்புதமான அந்த ரூபத்தை நினைத்து நினைத்து, எனக்குப் பெரிய ஆச்சர்ய முண்டாகிறது; மீட்டு மீட்டும் களிப் படைகிறேன். 77

यत्र योगेश्वरः कृष्णो
यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूति-
र्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७८ ॥

கண்ணன் யோகக் கடவுள் எங்குளன், வில்லினை யேந்திய விஜயன் தன்னொடும், அங்கு திருவும் ஆக்கமும் வெற்றியும் நிலை தவறாத நீதியும் நிற்கும்; இஃதென் மதம். 78

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे 'संन्यासयोगो' नाम अष्टादशोऽध्यायः ।**

இங்ஙனம் உபநிஷத்தும் பிரம்மவித்தையும் யோக நூலும் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்பாஷணையுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் 'ஸந்யாஸ யோகம்' என்ற பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

**ॐ तत् सत्**—ஓம் தத்ஸத்.

ஸ்ரீமத் பகவத் கீதை முற்றிற்று.

# பிழைத் திருத்தம்.

| அத்தியாயம். | சுலோகம். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 9 | 3 | முடையோர் ! | முடையோர் ; |
| 1 | 27 | 1 | சகுணங்களுன் | சகுணங்கள் |
| 2 | 32 | 2 | क्षत्रियाः | क्षत्रियाः |
| 2 | 35 | 3 | நன்கு | நன் |
| 2 | 38 | 2 | கொண்டு நீ, | கொண்டு, நீ |
| 2 | 45 | 2 | निर्द्वन्द्वो | निर्द्वन्द्वो |
| 3 | 18 | 3 | எவ்விதம் | எவ்விதப் |
| 3 | 37 | 1 | அஃது | இஃது |
| 7 | 7 | 1 | என்னைக்காட்டூம் | என்னைக்காட்டிலும் |

| அத்தியாயம். | சுலோகம். | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- | --- |
| 7 | 12 | 2 | नत्वहं | न त्वहं |
| 9 | 33 | 5 | இவ்வுலகம் | இவ்வுலகப் |
| 10 | 12 | 2 | पावत्रं | पवित्रं |
| 10 | 17 | 1 | யோகி | யோகி ! |
| 13 | 7 | 1 | द्वेषः | द्वेषः |
| 17 | 19 | 1 | மூடர் | மூடக் |
| 17 | 28 | 1 | तपस्तत | तपस्तत् |
| 18 | 58 | 1 | கொண்டிருப்போன் | கொண்டிருப்போனாய் |